# الزواج

**لفضيلة الشيخ محمد بن صالح العثيمين رحمه الله تعالى**

**ترجمه الى لغة تاميل : علي ابو خالد العمرى**

# திருமணம்

மேன்மைமிகு ஷைக்

**முஹம்மத் பின் ஸாலிஹ் அல் - உஸைமீன் (ரஹ்)**

தமிழில்

**K. J. மஸ்தான் அலீ பாகவி, உமரீ (அபூ காலித்)**

بسم الله الرحمن الرحيم

## சமூகச் சூழ்நிலைகள்

அல்-களீம் சட்டக் கல்லூரியும் அரபி மொழியியல் கல்லூரியும் இணைந்து நடத்தும் இந்தக் கலாச்சாரப் பண்பாட்டு நிகழ்ச்சியில் கலந்து கொண்டு உரையாற்றும் நல்வாய்ப்பு எனக்குக் கிடைத்தது குறித்து நான் மிகவும் மகிழ்ச்சி அடைகிறேன்.

- இதில் கலந்து கொள்வதன் மூலம் எனக்கும் எனது உரையைக் கேட்கக்கூடிய, படிக்கக் கூடிய அனைவருக்கும் - இன்ஷா அல்லாஹ்- நற்பயன் கிடைக்க வேண்டும் என நான் விரும்பு கிறேன்.

அல்லாஹ் நம் அனைவரது பணியையும் அவனுக்கே உரித்தான தூய பணியாய், அவனது விருப்பத்திற்கு ஏற்ற நல்ல பணியாய் ஆக்கி அருளுமாறு இறைஞ்சுகிறேன்.

எனக்குக் கொடுக்கப்பட்டுள்ள தலைப்பின் கீழ் பேசத்தொடங்கும் முன் ஒரு விஷயத்தை எடுத்துச்சொல்ல விரும்புகிறேன். அது பொருத்தமான ஒன்றாகவே அமையும் இன்ஷாஅல்லாஹ்!

அன்புச் சகோதரர்களே! பெரியோர்களே! இன்றைய காலத்தில் இஸ்லாம் பல்வேறு சவால் களை எதிர் நோக்கியுள்ளது., பல திசைகளில் இருந்தும் இஸ்லாத்தின் மீது தாக்குதல் தொடுக் கப்பட்டுள்ளது என்பதை நீங்கள் அறிவீர்கள்.

1) சிந்தனை ரீதியான தாக்குதல்
2) பண்பாட்டு ரீதியான தாக்குதல்
3) கொள்கை ரீதியான தாக்குதல்

இவ்வாறு இஸ்லாத்தின் மீது தாக்குதல் தொடுக்கப்படும் சூழ்நிலைகளில் எல்லாம் அவை எவ்வளவு பலமான தாக்குதல்களாக இருந்தா லும் அவற்றை எதிர் கொண்டு பதில் அளிப்பது ஏன், அதிக பலத்தோடு அவற்றிற்குப் பதிலடி கொடுப்பது அவசியம் என்பதையும் அப்படிச் செய்யவில்லை எனில் அத்துடன் இஸ்லாத்தின் கதை முடிந்தது என்றே பொருள் என்பதையும் நீங்கள் அறிவீர்கள்.

இந்தப்பணி மார்க்க அறிஞர்கள், மார்க்கத்தின் மீது பற்று உள்ளோரின் தோளின் மீது விழுந் துள்ள பொறுப்பாகும். அவர்களால் எந்த அளவுக்கு முயற்சி செய்து- நாற்புறங்களில் இருந்தும் நம்மை நோக்கி வருகிற இந்தத் தாக்கு தல்களை - எதிர்ப்பு அலைகளைத் தடுத்து நிறுத்திட வேண்டும். ஏனெனில் இன்றைய முஸ்லிம் உலகம் இந்த எதிர்ப்பு அலைகளை எல்லாம் எப்படிச் சமாளிப்பது என்பதை அறியாமல் திகைத்து நிற்கிறது!

சுஊதி அரேபியா இஸ்லாத்தின் தொட்டிலாகவும் முஸ்லிம்களின் கிப்லாவாகவும் அவர்களுக் கெல்லாம் ஒரு முன்மாதிரியாகவும் திகழ்கிறது. எனவே நாச வேலைகள் அனைத்தையும் இந்த நாட்டை நோக்கித்தான் திருப்பி விட வேண்டும் என்று எதிரிகள் கூறுவதை நாம் பரலவாகக் கேள்விப்படுகிறோம்.

அவ்வாறே எதிரிகள் இன்று சிந்தனை ரீதி யாகவும் பண்பாட்டு ரீதியாகவும் இந்த நாட்டை அழித்து நாசமாக்கிடக் கடும் தாக்குதல்கள் தொடுத்திருப்பதைக் காணலாம். கடுமையான சூழ்ச்சி

வலை பின்னி வருவதையும் நாற்புறங்களில் இருந்தும் தாக்குதலுக்கு வரிந்து கட்டிக் கொண்டிருப்பதையும் காணலாம்!

எதிரிகளின் இந்த தீயசூழ்ச்சிகளை முளையிலேயே கிள்ளி எறிந்திட இந்நாட்டிலுள்ள அறிஞர் பெருமக்களும் வாய்மைமிக்க தலைவர்களும் உரிய முயற்சிகளை மேற்கொள்ளவில்லை எனில் பெரும் குழப்பங்களும் தீமைகளும் தொல்லைகளும் தலைதூக்குவது நிச்சயம்! எதிரிகள் இந்நாட்டினுள் ஊடுருவி உளவு வேலைகளில் ஈடுபட்டு விரும்பத்தகாத விபரீதங்கள் ஏற்படுவதை நாம் காண நேரிடும்!

சகோதரர்களே! இந்த எதிர்ப்பலைகளுக்கு எதிரில் நாம் ஆற்றவேண்டிய கடமைகள் இவைதாம்:

1) ஒருங்கிணைந்த இஸ்லாமிய அழைப்புப் பணி.
2) ஒருங்கிணைந்த உழைப்பு
3) நம்மிடையே ஊடுருவுவதற்கான சந்தர்ப்பம் எதிரிகளுக்கு அளிக்காதிருப்பது

ஆனால் இந்த அடிப்படையில் நாம் செயல்படவில்லை எனும் உண்மையை நான் துணிந்து சொல்வேன். நம்மில் ஒவ்வொருவரும் தனித்தனியேதான் செயல்படுகிறோம். ஓர் இலட்சியத்திற்காக இரண்டு பேர் ஒற்றுமையாக செயல்படுவதை நாம் காணமுடியவில்லை. இன்னும் தெளிவாகச் சொல்வதானால் - ஒரு பாதையில் இரண்டு பேர் பயணிப்பது அரிதாக உள்ளது., இத்தனைக்கும் அந்த இருவரின் இலட்சியம் ஒன்றுதான்!

ஆகையால் என்னைப் பொறுத்தவரையில் இந்நாட்டில் வாழும் அறிஞர் பெருமக்களுடைய கடமை யாதெனில் அவர்கள் அனைவரும் ஒரு லட்சயித்தின் கீழ் ஒன்றுதிரள வேண்டும்., அவர்கள் ரியாத்தை சேர்ந்தவர்களாயினும் ஹிஜாஸை சேர்ந்தவர்களாயினும் கஸீமை சேர்ந்தவர்களாயினும் சரியே! அனைவரும் ஒரே குறிக்கோளுக்காக ஒன்றுபட வேண்டும். மிகுந்த பொறுப்பு உணர்வுடன் பிரச்னைகளை ஆராய வேண்டும். ஏனெனில் இந்தப் பிரச்னைகள் மிகவும் அபாயகரமானவை என்பது எனது கருத்தாகும். எனவே முழுமையாக இவற்றைப் பரிந்திட வேண்டும். குறிப்பாக தகவல் தொடர்புச் சாதனங்கள், பண் பாட்டியல் விவகாரங்கள், கல்விக் கூடங்களின் பாடத்திட்டம் - கற்பிக்கும்முறை ஆகியவற்றைச் சீர்தூக்கிப் பார்க்க வேண்டும். அத்துடன் தீனின் - கொள்கைகோட்பாடுகள், பண்பாடுகளை விட்டு பொதுமக்கள் விலகிச் செல்வதற்கான காரணங்களையும் ஆராய்ந்திட வேண்டும்.

அது மட்டுமல்ல, இன்று பெரும்பாலான மாணவர்களும் கல்வியாளர்களும் உலகச் சுகபோகங்களின் பின்னே ஓடிக்கொண்டிருக்கும் நிலையைப் காண்கிறோம். சொத்து சுகங்களையும் வாழ்க்கைச் சாதனங்களையும் பெருக்கிடும் முயற்சியில் மூழ்கிக் கிடப்பதைப் பார்க்கிறோம்! இந்நிலை, இவர்களின் அழைப்புப் பணியை ஊனப்படுத்துவதுடன் பொதுமக்களிடம் அதனை மதிப்பிழக்கவும் செய்து விடுகிறது.

இறைமார்க்கத்தைக் கற்றுக் தேர்ந்த ஒருவரின் நடத்தை, அவரைச் சுற்றிலும் வாழ்கிற மக்களிடம் ஆழமான பாதிப்பை ஏற்படுத்த வல்லதாகத் திகழ்கிறது. நாலாந்தர மனிதர்கள் உலகச் சுகங்களைத் தேடி அலைவது போன்று நம்முடைய கல்வியாளர்களும் உலக சுக போகங்களில் மூழ்கிக் கிடப்பதையே மக்கள் பார்ப்பார்களேயானால் அவர்களின் அறிவுரைகள், வழிகாட்டல்களின் மீது மக்களுக்கு எந்த நம்பிக்கையும் பிடிப்பும் ஏற்படாது!

சகோதரர்களே! இவ்வாறுதான் ஆட்சி அதிகாரத்தில் உள்ளவர்களைப் பொறுத்த வரையில் - அவர்கள் விஷயத்தில் நலம் நாடுவதும் நல்லுரை பகர்வதும் நம்மீது கடமையாகிறது. ஏனெனில் அண்ணல் நபி (ஸல்) அவர்கள் தீன் என்பது நலம் நாடுவதே என்று திரும்பத்திரும்ப மூன்று தடவை கூறினார்கள். தோழர்கள் கேட்டார்கள்: அல்லாஹ்வின் தூதரே! யாருக்கு நலம் நாடுவது? அதற்கு நபியவர்கள், அல்லாஹ்வுக்கும் அவன் தூதருக்கும் அவனது வேதத்திற்கும் முஸ்லிம்களின் தலைவர்களுக்கும் அனைத்து முஸ்லிம்களுக்கும் நலம் நாடுவதாகும் என்று பதில் அளித்தார்கள்.

எனவே ஆட்சியதிகாரத்தில் உள்ளோருக்கு நலம் நாடுவது - நல்லுரை பகர்வது நமது கடமை., அதில் குறிப்பிட்ட சிலரை மட்டும் நாம் நம்பிக்கிக் கொண்டிருக்கக் கூடாது., அவர்கள் வேண்டுமானால் ஆட்சியில் இருப்போருக்கு நல்லுரை கூறட்டுமே என்று! ஆட்சிப் பொறுப்பில் உள்ளோருக்கு நல்லுரை கூறுவோரின் எண்ணிக்கை அதிகமாக வேண்டும். சத்தியத்தை நாற்புறங்களில் இருந்தும் அவர்கள் அறிந்திட வேண்டும்., எல்லாத் திக்கிலிருந்தும் நல்லுரை அவர்களைச் சென்றடைந்திட வேண்டும். அப்பொழுது அதன் பக்கம் கவனம் செலுத்தித்தான் ஆக வேண்டும்., சத்தியத்தின் வழியில் சென்றுதான் தீரவேண்டும் என்கிற நிலை வரும்! அதற்கான நற்பேற்றை அவர்களுக்கு அல்லாஹ் வழங்கிட வேண்டுமென அவனை இறைஞ்சுவோமாக! இதுவே அண்ணல் நபி(ஸல்) அவர்களின் தெளிவான வழிமுறையாகும்.

இவ்வாறே முஸ்லிம் பொதுமக்களைப் பொறுத்த வரை - பெரும்பாலான பள்ளிவாசல்களில் வேதனைக்குரிய நிலை என்னவெனில், அநேக இமாம்கள் கல்வியறிவற்றவர்களாய் இருப்

பதைப் பார்க்கிறேம்! மக்களுக்கு அவர்கள் அறிவுரை கூறுவதில்லை., நல்வழிகாட்டுவதில்லை., அவர்களோடு பேசுவதே இல்லை!

சில காலத்திற்கு முன்பு வரையில் - உலக வாழ்வில் செல்வச் செழிப்பின் வாயில்கள் மக்களின் மீது திறந்துவிடப்படுவதற்கு முன்பு வரையில் இமாம்கள் சில நல்ல நூல்களைத் தேர்ந்தெடுத்து தொழுகையாளிகளுக்குப் படித்துக் காண்பித்துக் கொண்டிருந்தார்கள். இவ்வாறு அன்றைய இமாம்கள் கல்வியாளராக இல்லாதிருப்பினும் கல்விப்பணி செய்வார்கள். தொழுகையாளிகள் நற்பயன் அடைந்து வந்தார்கள்.

ஆனால் இன்றோ பெரும்பாலான பள்ளி வாசல்களில் நூல்கள் எதுவும் வாசிக்கப்படுவதில்லை! ஜமாஅத்தினருக்கு இமாம்கள் பயன் உள்ள வழிகளைக் காட்டுவதில்லை.

இதனால் தீனின் விஷயங்களை-சட்டங்களை மக்கள் பெரும் அளவு அறியாதவர்களாய் இருக்கும் நிலையை நீங்கள் காண்கிறீர்கள். இவையெல்லாம் அறிஞர்கள், கல்வியாளர்களின் குறைபாட்டினால் நேர்ந்த விளைவுகளாகும். பொறுப்பில் உள்ளவர்களின் அலட்சியப் போக்கினால் ஏற்பட்ட நிலைகளாகும்.

எனவே சகோதரர்களே! நாம் அனைவரும் ஓரிடத்தில் ஒன்றுகூடவேண்டும். நம்முடைய முயற்சிகளை ஒருமுகப்படுத்த வேண்டும். நம்முடைய ஆட்சியாளர்களுக்கு நலம் நாட வேண்டும். நல்லுரை கூற வேண்டும். மஸ்ஜித்களில் முஸ்லிம் பெருமக்களுக்கு நல்லறிவு புகட்டிட முயற்சிகள் மேற்கொள்ளவேண்டும். மஸ்ஜித்களில் மட்டுமல்ல, வீதிகளில், பொது இடங்களில் பொது நிகழ்ச்சிகளில் நம்மால் முடிந்த வரையில் இந்தப் பணிகளை மேற்கொள்ள வேண்டும்.

இன்னொரு அதிமுக்கியமான விஷயம், நமது இளைஞர்களுக்கும் பெரியவர்களுக்கும் இடையில் நாளுக்கு நாள் தொடர்புகள் குறைந்து வருகின்றன. இடைவெளி அதிகமாகி வருகிறது. இதன் காரணமாக நமது இளைஞர்கள் திசை தெரியாமல் திகைத்து நிற்கிறார்கள். சரியான வழிகாட்டல் இல்லாமல் தடுமாறுகிறார்கள்.

உண்மையில் பெரியவர்களின் அலட்சிய மனப்பான்மைதான் இவற்றிற்கெல்லாம் காரணம்! பெரியவர்களில் யாரும் இளைஞர்களின் நடைமுறை வாழ்க்கையில் பொதுவாகக் கவனம் செலுத்துவதில்லை. அவர்கள் சொல்கிற எந்தக் கருத்தையும் செவிசாய்த்துக் கேட்பதில்லை., ஆக்கப்பூர்வமான கருத்தாக அது இருந்தாலும் சரியே! இது தவறு!

எனவே நமது கடமையாதெனில் நாம் இந்த இளைஞர்களுடனே இருந்து அவர்களின் நிலைமைகளைச் சீர்தூக்கிப் பார்க்க வேண்டும். அவர் களின் மீது பாதிப்பை ஏற்படுத்தக்கூடிய சூழ்நிலைகள் யாவை? இறைமார்க்கத்தை அறவே அறியாதவர்களாய் இருப்பதன் காரணம் என்ன? தீனில் பால் பற்றுதல் கொள்ளாது விலகிச் செல்வது எதனால்? என்பதை எல்லாம் நாம் கவனிக்க வேண்டும்.

நோயினை அறிந்தால்தானே அதற்குரிய மருந்தை நம்மால் கொடுக்க முடியும்!

ஆனால் நாம் என்ன செய்கிறோம்? இளைஞர்கள் சிலர் தேவையில்லாத சில செயல்களைச் செய்து விட்டால் எல்லா இளைஞர்களையும் ஒட்டு மொத்தமாகப் பறக்கணித்து விடுகிறோம்., அவர்கள் அனைவரையும் ஒதுக்கி வைத்து விடுகிறோம். எல்லா இடங்களிலும் அவர்களைக் குறை சொல்லத்தொடங்கி விடுகிறோம்! அது மட்டுமல்ல, அவர்களுடைய பணிகளை அலட்சியப் படுத்துகிறோம். அவர்களைக் கேவலமாகப் பார்க்கிறோம். இந்தப் போக்குதான் - பெரியவர்கள், கல்வியாளர்கள், இறைமார்க்கத்தின் மீது பற்றுள்ளவர்கள் ஆகியோரை விட்டு இளைஞர்களைத் தொலைவில் ஆக்கிப் பெரும் தீமையை ஏற்படுத்தியுள்ளது. இறுதியில் ஷைத்தான்கள் தங்களின் விருப்பப்படி அந்த இளைஞர்களை இழுத்துச் செல்கின்றனர்!

ஆகவே சகோதரர்களே! முக்கியமான இந்தப் பிரச்னையைப் பொறுப்போடு ஆராய்வது நமது கடமையாகும். இதன் பக்கம் முழுமையாகக் கவனம் செலுத்த வேண்டும். இதில் மேலும் நாம் தவறிழைக்கக் கூடாது.

குறிப்பாக ஆசிரியர்கள் மாணவர்களை இஸ்லாமியப் பண்பாட்டில் வார்த்தெடுப்பதற்கு முழுமையாக முயன்றிட வேண்டும்.

முஹம்மத் நபி(ஸல்) அவர்களின் போதனைகளில், குர்ஆன் - ஹதீஸின் வழிகாட்டல்களில் மாணவர்களுக்கு ஆர்வத்தை ஏற்படுத்தும் வகை யில் விளக்கிக் கூற வேண்டும்.

தீனின் - இறைமார்க்கத்தின் யதார்த்த நிலை பற்றிய அறிவுஞானங்களை ஊட்ட வேண்டும்.

ஷரீஅத் சட்டங்களைத் தெளிவாக விளக்குவதுடன் சட்ட நுணுக்கங்களையும் நுட்பங்களையும் அவர்களுக்க விவரிக்க வேண்டும்.

ஏனெனில் இன்றுள்ள கற்பிக்கும் முறையில் - குறிப்பாக கல்லூரிகளில் உள்ள கல்வித் திட்டத்தில், முறையில் சில குறைகளைக் காண்கிறேன். ஆசிரியர்கள் சிலர் பாடங்களை வறட்சியாக நடத்துகின்றனர். அதாவது, மார்க்கச்சட்டங்களுக்கான ஆதாரங்களையும் சட்ட நுணுக்கங்களையும் மாணவர்களுக்கு விரிவாகச் சொல்லிக் கொடுப்பதில்லை.

ஓர் இறைநம்பிக்கையாளன் அல்லாஹ் - ரஸூலின் கட்டளைகளுக்கு முற்றிலும் கீழ்ப்படிந்து நடக்க வேண்டும். அவற்றின் சட்ட நுணுக்கத்தை அறிந்தாலும் அறியாவிட்டாலும் சரியே - என்பது உண்மைதான். குர்ஆனில் அல்லாஹ் கூறியிருக்கிறான்:

قال الله: وَمَا كَانَ لِمُؤْمِنٍ وَّ لاَ مُؤْمِنَةٍ اِذَا قَضَى اللهُ وَ رَسُوْلُهُ اَنْ يَّكُوْنَ لَهُمُ الْخِيَرَةُ مِنْ اَمْرِهِمْ (سورة الأحزاب ، الآية : ٣٦)

“அல்லாஹ்வும் அவனுடைய தூதரும் ஏதேனும் ஒரு விவகாரத்தில் தீர்ப்பளித்து விட்டால் பிறகு அந்த விவகாரத்தில் சுயமாகத் தீர்ப்புளிக்கும் அதிகாரம் - இறைநம்பிக்கை கொண்ட எந்த ஆணுக்கும் பெண்ணுக்கும் கிடையாது” (33 : 36)

என்றாலும் மாணவர்கள் சட்ட நுணுக்கத்தையும் அறிந்து கொண்டால் மன நிறைவு பெறு வார்கள். ஷரீஅத் சட்டங்களின் பக்கம் கவனம் திரும்பும். அவற்றை நடைமுறைப்படுத்தும் ஆர்வம் பிறக்கும்.

ஆகையால் நம்முடைய ஆசிரிய சகோதரர்களுக்குச் சொல்லிக்கொள்ள விரும்புவது என்ன வெனில், கல்வியை - மாணவர்களின் முன்னிலையில் புத்தம் புதிதாக உயிர்த்துடிப்புடையதாக சமர்ப்பிக்க வேண்டும். அந்தக் கல்வி அவர்களின் உள்ளங்களைத் தொட வேண்டும். மனத்தைப் பண்படுத்த வேண்டும். அதனால் அவர்களுக்குச் சிந்தனைத் தெளிவும் மன நிம்மதியும் ஏற்பட வேண்டும்.

இப்பொழுது நான் பேச எடுத்துக்கொண்ட தலைப்புக்கு வருகிறேன். திருமணம், அதன் பயன்கள், அது தொடர்பாக உரிமைகள், கடமைகள் என்பது எனது இன்றைய சொற்பொழிவின் தலைப்பாகும்.

இந்தத் தலைப்பினை - இதன் முக்கியத்துவம் கருதியே நான் தேர்ந்தெடுத்துள்ளேன். ஏனெனில் மக்களில் பெரும்பாலோர் திருமணம் தொடர்பாக பல சட்டங்களை அறியாதிருக்கிறார்கள். மேலும் திருமணத்தால் சமூகக் கூட்டுவாழ்க்கையில் பல சிக்கல்கள் எழுகின்றன. அவற்றிற்கு எளிதான தீர்வுகள் வேண்டுமென - சமுதாய மக்களின் நலனிலும் தீனில் நலனிலும் அக்கறை கொண்ட வாய்மையுள்ள ஒவ்வொருவரும் விரும்புகின்றனர். சிக்கல்கள் பற்றி அலசுகிற போது தான் - விளக்கத்தின் ஒளியில் அவற்றைக் கொண்டு வந்தால்தான் அவற்றிற்கு எளிதான தீர்வுகள் கிடைக்கும். மக்கள் அந்தப் பிரச்னைகள் குறித்து அலட்சியமாக இருந்தால் -அவற்றைப் பார்க்கவேமாட்டோம் என கண்களை மூடிக்கொண்டால் அவை சிக்கல்கள் நிறைந்தே இருக்கும். அவை பற்றிய தெளிவின்மை அதிகரித்துக்கொண்டே செல்லும்.

நான், இந்தத் தலைப்பை பத்து வகையாகப் பிரித்துள்ளேன். அவை வருமாறு:

1) நிகாஹ் - திருமணம் என்பதன் பொருள்
2) திருமணத்தின் சட்ட நிலை
4) மணமகளின் பண்புகள்
5) திருமணத்தின் காரணமாக விலக்கப்படும் பெண்கள்
6) ஒருவன் எத்தனை பெண்களைத் திருமணம் செய்யலாம்?
7) திருமணத்தின் தத்துவம்
8) திருமணத்தினால் ஏற்படும் நலன்கள், சட்ட நிலைகள்
9) மணவிக்கின் சட்டமும் அதன் ஒழுங்குமுறைகளும்
10) மணவிக்கினால் ஏற்படும் சட்டநிலைகள்

## 1 - நிகாஹ் என்பன் பொருள்

நிகாஹ் எனும் சொல்லின் அகராதிப் பொருள் திருமண ஒப்பந்தம் செய்தல் அல்லது மனைவி யுடன் உடலுறவு கொள்ளல் என்பதாகும்.

அபூ அலீ - அல் காலீ எனும் அரபி மொழி வல்லனர் கூறுகிறார்: இந்தப் பொருள்வேறுபாட்டைப் புரிந்து கொள்வதற்கு அரபிகள் மிக நுட்பமான சொல்லாட்சிகளைப் பயன்படுத்துகின்றனர். அதன் மூலம் திருமண ஒப்பந்தம் எனும் பொருளில் எங்கு வருகிறது, உடலுறவு கொள்ளல் எனும் பொருளில் எங்கு வருகிறது என்பதை எளிதில் புரிந்து கொள்ளலாம்.

எடுத்துக்காட்டாக, ‘நகஹ ஃபுலானா’ அல்லது ‘நகஹ பின்(த்)த ஃபுலானா’ என்று சொல்லப் பட்டால் அவன் இன்ன பெண்ணை திருமணம் செய்தான் அல்லது இன்னாரின் மகளைத் திரு மணம் செய்தான் என்று பொருள்.

‘நகஹ இம்ரஅ(த்)தஹூ‘ அல்லது ‘நகஹ ஸௌஸ(த்)தஹூ‘ என்றால் அவன் தன்னுடைய மனைவியுடன் உடலுறவு கொண்டான் என்று பொருள்.

நிகாஹ் என்பதன் மார்க்க ரீதியான பொருள் ஆண்பெண் இருவருக்கும் இடையிலான ஒப்பந் தம் என்பதாகும். அதன் நோக்கம் அவ்விருவரும் ஒருவர் மற்றவரின் மூலம் சுகம் அனுபவிப்பதும் நல்லதொரு குடும்பத்தை அமைப்பதும் சீரானதொரு சமுதாயத்தை உருவாக்குவதும் ஆகும்.

இதிலிருந்து ஓர் உண்மை தெளிவாகிறது. திருமணத்தின் நோக்கம் சுகம் அனுபவிப்பது மட்டுமல்ல., அத்துடன் வேறொரு இலட்சியமும் அங்கே உண்டு. அதுதான் சிறந்ததொரு குடும் பத்தை அமைப்பதும் சீரானதொரு சமுதாயத்தை உருவாக்குவதுமாகும். ஆனால் மனிதர்களின் நிலைமைகளைப் பொறுத்து இந்த இரண்டு குறிக்கோள்களில் ஒன்று மற்றதை மிகைத்து நிற்கும்.

## 2 - திருமணத்தின் சட்ட நிலை

திருமணம் செய்வது மார்க்கத்தில் அனுமதிக்கப்பட்டதொரு செயலாகும். திருணம் செய்வதற் கான சக்தியும் வேட்கையும் உள்ள மனிதர்களின் விஷயத்தில் அது கட்டாயமாக வலியுறுத்தப் பட்ட ஒன்றாகும். திருமணம் என்பது ரஸூல்மார்களின் வழிமுறைகளில் உள்ளதாகும். திருக் குர்ஆனில் அல்லாஹ் கூறுகிறான்:

قال الله عز وجل : وَلَقَدْ أَرْسَلْنَا رُسُلاً مِّنْ قَبْلِكَ وَ جَعَلْنَا لَهُمْ أَزْوَاجًا وَّ ذُرِّيَّةً (سورة الرعد الآية : ٣٨)

“உமக்கு முன்பும் தூதர்கள் பலரை நாம் அனுப்பியுள்ளோம். மேலும் மனைவி மக்களை உடையவர்களாகவே அவர்களை நாம் ஆக்கி யிருந்தோம்” (13 : 38)

அண்ணல் நபி (ஸல்) அவர்கள் திருமணம் முடித்திருந்தார்கள். மேலும் சொன்னார்கள்:

قال النبي ﷺ اِنِّي أَتَزَوَّجُ النِّسَاءَ فَمَنْ رَغِبَ عَنْ سُنَّتِي فَلَيْسَ مِنِّي

“நான் திருமணம் செய்துள்ளேன். எனவே யார் எனது வழிமுறையைப் புறக்கணிக்கிறாரோ அவர் என்னைச் சேர்ந்தவரல்லர்”

இதனால்தான் மார்க்க அறிஞர்கள் கூறுவர்: வேட்கை உள்ளவர் திருமணம் புரிவது நஃபில் - அதிகப்படியான வழிபாடுகளைவிடச் சிறந்ததாகும். ஏனெனில் அதில்தான் பல நலன்களும் பயன் களும் அடங்கியுள்ளன. அத்தகைய சில நலன்களையும் பயன்களையும் பின்னர் பார்ப்போம் - இன்ஷா அல்லாஹ்!

திருமணம் சில நேரங்களில் கடமையானதொரு செயலாகிறது. எவ்வாறெனில் ஒருவர் அதிக அளவு இச்சையுடையவராக இருந்தால் - அப்படிப்பட்டவர் திருமணம் செய்யாதிருந்தால் தடுக்கப் பட்ட (ஹராமான) செயலைச் செய்து விடுவதாக அஞ்சினால் அவர் தனது கற்பைப் பாதுகாக்க வேண்டும். தடுக்கப்பட்ட தீய நடத்தையில் வீழ்ந்திடாமல் அவர் தன்னைத் தற்காத்துக் கொள்ள வேண்டும். அண்ணல் நபி (ஸல்) அவர்கள் அருளினார்கள்:

قال النبي ﷺ : يَا مَعْشَرَ الشَّبَابِ مَنِ اسْتَطَاعَ مِنْكُمُ الْبَاءَةَ فَلْيَتَزَوَّجْ ، فَإِنَّهُ أَغَضُّ لِلْبَصَرِ وَ أَحْصَنُ لِلْفَرْجِ وَمَنْ لَمْ يَسْتَطِعْ فَعَلَيْهِ بِالصَّوْمِ فَإِنَّهُ لَهُ وِجَاءٌ

“ஓ இளைய சமுதாயமே! உங்களில் எவர் திருமணத்திற்கு சக்தி பெற்றுள்ளாரோ அவர் திருமணம் செய்து கொள்ளட்டும். ஏனெனில் திருமணம் பார்வையைத் தாழ்த்தக்கூடியது., வெட்கத்தலத்தைப் பாதுகாக்கக்கூடியது! எவர் அதற்கு சக்தி பெறவில்லையோ அவர் நோன்பு நோற்கட்டும். திண்ணமாக நோன்பு அவருக்கு ஒரு கேடயமாகும்”

## 3 - திருமணத்தின் நிபந்தனைகள்

இஸ்லாமிய ஒழுங்கமைப்பின் சிறப்பும் சட்டங்களை வகுத்தளிப்பதிலுள்ள அதன் நுட்பமும் யாதெனில், ஒப்பந்தங்கள் - உடன்படிக்கைகளுக்கு சில நிபந்தனைகளை இஸ்லாம் விதித்திருப்ப தாகும்., அவற்றைக்கொண்டு அந்த ஒப்பந்தங்கள் கட்டமைப்பைப் பெறுகின்றன. தொடர்ந்து அவற்றைச் செயல்படுத்துவதற்கான கால அளவும் தகுதியும் நிர்ணயமாகின்றன. இவ்வாறாக ஒவ்வொரு ஒப்பந்தத்திற்கும் சில நிபந்தனைகள் உள்ளன. அவை இன்றி அந்த ஒப்பந்தங்கள் முழுமை பெறமாட்டா!

இந்நிலை ஷரீஅத் சட்டங்களின் உறுதிப்பாட்டிற்கும் பயன்பாட்டிற்கும் தெளிவான ஆதார மாக உள்ளது. இந்தச் சட்டங்கள் - பேரறி வாளனும் நுண்ணறிவாளனும் ஆகிய இறைவனிடம் இருந்து அருளப்பட்டவைதாம் என்பதற்குச் சான்றாகவும் உள்ளது. மக்களைச் சீர்படுத்தக் கூடிய விதிமுறைகள் யாவை என்பதை அந்த இறைவனே நன்கறிவான் ...அவர்களுடைய தீனும் உலக வாழ்வும் எந்தெந்த சட்டங்களால் சீர்பெறுமோ அவற்றையே அவர்களுக்குச் சட்ட விதியாக்கு கிறான். இப்படிச் செய்வதன் நோக்கம் எந்தவிவகாரமும் கட்டுப்பாடுகளில்லாமல் ஒழுங்கற்றுப் போய் விடக் கூடாது என்பதே!

இத்தகைய ஒப்பந்தங்களில் ஒன்றுதான் திருமண ஒப்பந்தம். அதற்குச் சில நிபந்தகைள் உள்ளன. அவற்றில் முக்கியமானவற்றை இங்கு கூற விரும்புகிறேன்.

### 1 - மணமகன் - மணமகளின் விருப்பம்

விரும்பாத பெண்ணை மணந்து கொள்ளு மாறு மணமகளை நிர்பந்தம் செய்வது கூடாது. இதுபோல் விரும்பாத ஆண்மகனை மணந்து கொள்ளுமாறு மணமகளை நிர்பந்தம் செய்வது கூடாது. அல்லாஹ் கூறுகிறான்:

قال الله تعالى: يَا اَيُّهَا الَّذِيْنَ آمَنُوْا لاَ يَحِلُّ لَكُمْ اَنْ تَرِثُوْا النِّسَاءَ كَرْهًا (سورة النساء الآية: ١٩)

“இறைநம்பிக்கை கொண்டவர்களே! விதவைப் பெண்களுக்கு -நீங்கள் பலவந்தமாக வாரிசுதாரர் களாய் ஆகுவது கூடாது” (4 : 19) அண்ணல் நபி(ஸல்)அவர்கள் அருளினார்கள்:

قال النبي ﷺ : لاَ تُنْكَحُ الاَيِّمُ حَتَّى تُسْتَأمَرُ وَ لاَ تُنْكَحُ الْبِكْرُ حَتَّى تُسْتَأذَنُ ، قَالُوْا يَا رَسُوْلَ اللهِ وَ كَيْفَ اِذْنُهَا ؟ قَـالَ أَنْ تَسْكُتَ – رواه مسلم

“விதவைக்கு அவளது இசைவின்றி திருமணம் செய்விப்பது கூடாது. கன்னிப் பெண்ணுக்கு - அவளது அனுமதி கேட்காமல் திரு மணம் முடித்து வைப்பது கூடாது. தோழர்கள் கேட்டார்கள்: அல்லாஹ்வின் தூதரே! அவளிடம் அனுமதி கேட்பது எவ்வாறு? அதற்கு நபியவர்கள் சொன் னார்கள்: அவளது மௌனமே அவளது அனுமதி ஆகும்” (நூல்: முஸ்லிம்)

- பெண்ணுக்கு அவளது விருப்பமில்லாமல் திருமணம் செய்துவைப்பதை நபி(ஸல்)அவர்கள் தடைசெய்துள்ளார்கள்.அவள் விதவையாக இருந்தாலும் சரி, கன்னிப்பெண்ணாக இருந்தாலும் சரியே! ஆனால் விதவைப் பெண் தனது விருப்பத்தை வெளிப்படையாகச் சொல்ல வேண்டும். கன்னிப் பெண்ணுக்கு அவளது (சந்தோசமான) மௌனமே போதுமானதாகும். ஏனெனில் தனது திருப்தியை வெளிப்படையாகச் சொல்ல சில நேரம் அவள் வெட்கப்படலாம்!

திருணம் வேண்டாமென ஒருபெண் மறுத்து விட்டால் திருமணம் முடித்தாக வேண்டு மென அவளை யாரும் கட்டாயம் செய்வது கூடாது. அவளுடைய தந்தைக்கும்கூட அந்த உரிமை கிடையாது! ஏனெனில் அண்ணல் நபி(ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள்:

قال النبي ﷺ : وَالْبِكْرُ يَسْتَأذِنُهَا اَبُوْهَا – رواه مسلم

“கன்னிப் பெண்ணிடம் - அவளுடைய தந்தை அனுமதி கேட்க வேண்டும்” (நூல்: முஸ்லிம்)

இந்நிலையில் அவளுடைய தந்தை மீது எந்தக் குற்றமும் இல்லை. தன் மகளுக்கு அவர் மணம் முடித்து வைக்கவில்லை என்று! ஏனெனில் திருமணம் வேண்டாமென மறுத்தது அவள்தான்! ஆனாலும் அவளைப் பராமரித்துப் பாதுகாக்கும் கடமை அவர் மீது உள்ளது.

இரண்டு பேர் அவளைப் பெண் கேட்டு வருகிறபோது நான் இன்னாரை விரும்புகிறேன் என்று அவள் சொல்ல அவளுடைய தந்தையோ நான் சொல்கிற மணமகனைத்தான் நீ மணந்து கொள்ள வேண்டும் என்று சொன்னால் - இந்நிலையில் அவள் விரும்பும் ஆண்மகனுக்குத் தான் அவளை மணம் முடித்துக் கொடுக்கவேண்டும்., அவன் அவளுக்குப் பொருத்தமாக இருக்கும் பட்சத்தில்! பொருத்தமற்றவனாக இருந்தால் அவளை அவனுக்கு மணம் முடித்துக் கொடுக்க முடியாது என மறுக்கும் உரிமை தந்தைக்கு உண்டு! தந்தை மீது எந்தக் குற்றமும் வராது!

## 2 - பொறுப்பாளர்

பொறுப்பாளர் யாரும் இன்றி திருமணம் நடை பெற்றால் அது கூடாது. ஏனெனில் அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள்: “ பொறுப்பாளர் இன்றி திருமணம் கிடையாது”

ஒரு பெண் தனது திருமணத்தைத் தானே முன்னின்று நடத்தினால் அவளது திருமணம் கூடாது. திருமண உடன்படிக்கையை அவளே நேரடியாக மேற்கொண்டாலும் சரி அல்லது இன் னொருவரிடம் பொறுப்பு ஒப்படைத்தாலும் சரியே அந்தத் திருமணம் கூடாது!

ஒரு பெண்ணின் வாரிசு உறவுக்காரர்களில் பருவ வயதும் பகுத்துணரும் ஆற்றலும் கொண் டவர் யாரோ அவர் அவளது பொறுப்பாளாவார். எடுத்துக்காட்டாக, தந்தை, தந்தையின் தந்தை (அதாவது பாட்டன்), மகன், மகனின் மகன் (பேரன்). பேரனின் மகன் (பூட்டன்) என இந்த வரிசையில் ஆனாலும் சரியே! மேலும் உடன் பிறந்த சகோதரர், தந்தைவழிச் சகோதரரின் புதல்வர்கள் - இவர்களில் நெருங்கிய உறவுடையவர் முதல் தரப்பொறுப்பாளர் ஆவார். அவ ருக்குப் பிறகு அடுத்த நிலையிலுள்ளவர்கள் அடுத்தடுத்து பொறுப்பாளர்களாக வருவார்கள்!

ஒரு பெண்ணின் தாய்வழிச்சகோதரர்களும் அவர்களின் மகன்களும் அவளுக்குப் பொறுப்பா ளராக வர முடியாது. இதேபோன்று தாயின் தந்தையும் தாய் மாமன்களும் பொறுப்பாளராக வர முடியாது. ஏனெனில் இவர்கள் வராஸத் - அனந்தர உறவுக்காரர்கள் அல்லர்.

திருமணம் நடைபெறுவதற்குப் பொறுப்பாளர் ஒருவர் அவசியம் எனும்போது -அவரது கடமை என்ன? பொருத்தமான - தகுதியான மணமகனை அவர் தேர்வு செய்ய வேண்டும். பலர் பெண் கேட்டு வந்தால் யார் மிகவும் பொருத்தமானவரோ அவருக்கே முன்னுரிமை கொடுக்க வேண்டும். ஒருவர் மட்டும் பொருத்தமானவராக இருந்து, அந்தப் பெண்ணும் அவரை மணந்து கொள்ள விருப்பம் தெரிவித்தால் அவருக்கே அவளை மணம் முடித்துக்கொடுப்பது பொறுப்பாளர் மீது கடமையாகும்.

இங்கு ஒன்றை நாம் கவனிக்க வேண்டும். ஒருவரை எந்த பெண்மகளுக்கு அல்லாஹ் பொறுப்பாளராக நியமித்திருக்கிறோனோ அந்தப் பெண்மகளுக்காக அவர் ஏற்றிருக்கிற பொறுப்பு எத்துணை பெரியது என்பதை நாம் அறிந்திட வேண்டும்! அந்தப் பொறுப்பு அவரிடம் ஒப்

படைக்கப்பட்டுள்ள ஓர் அமானிதம். அதைக் கண்ணும் கருத்துமாய்ப் பேணிநடப்தும் சரியான முறையில் அதைப் பயன்படுத்துவதும் அவர் மீது கடமையாகும். சில சுயநலன்களுக்காக அப் பெண்ணின் திருமணத்தைத் தடுத்துவைப்பதோ தனக்குக் கொடுக்கப்பட உள்ள மஹ்ர் தொகை யில் பேராசை கொண்டு பொருத்தமற்ற மணமகனுக்கு அவளை மணமுடித்துக் கொடுப்பதோ அவருக்கு ஆகுமானதல்ல! ஏனெனில் இது மோசடி செய்வதாகும். அல்லாஹ் திருக்குர்ஆனில் கூறுகிறான்:

قال الله تعالى : يَا اَيُّهَا الَّذِيْنَ آمَنُوْا لاَ تَخُوْنُوا اللهَ وَ الرَّسُوْلَ وَ تَخُوْنُوْا أَمَا نَاتِكُمْ وَ اَنْتُمْ تَعْلَمُوْنَ (سورة الأنفال الآية : ٢٧)

“நம்பிக்கை கொண்டோரே! அல்லாஹ்வுக் கும் அவனுடைய தூதருக்கும் (அறிந்தும் புரிந் தும்) மோசடி செய்யாதீர்கள்.அறிந்து கொண்டே உங்களது ‘அமானித’ங்களில் நம்பிக்கை துரோகம் செய்யாதீர்கள்” (8 : 27) இன்னோர் இடத்தில்,

قال الله تعالى: اِنَّ اللهَ لاَ يُحِبُّ كُلَّ خَوَّانٍ كَفُوْرٍ (سورة الحج : الآية : ٣٨)

“திண்ணமாக அல்லாஹ் நேசிப்பதில்லை., நம்பிக்கை மோசடி செய்யக்கூடிய, நன்றித்துரோ கம் செய்யக்கூடிய ஒவ்வொருவரையும்“ (22:38)

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

قال النبي ﷺ : كُلُّكُمْ رَاعٍ وَ كُلُّكُمْ مَسْؤُولٌ عَنْ رَعِيَّتِهِ

“உங்களில் ஒவ்வொருவரும் பொறுப்பாளரே! அவரவரின் பொறுப்பின் கீழ் உள்ளவர்கள் பற்றி உங்கள் ஒவ்வொருவரிடமும் விசாரணை செய்யப்படும்”

சமுதாயத்தில் சில பேரைக் காணலாம். அவர்களுடைய மகளைப் பெண்கேட்டு அவர்களிடம் தூது அனுப்பப்படும்போது - பொருத்தமான ஆடவரேதான் அவளைப் பெண்கேட்டுச் செல்கிறார் எனும்பொழுது அதனைத் தட்டிக்கழித்து விடுகிறார்கள். இவ்வாறு அடுத்தடுத்துப் பெண்கேட் டுச் செல்லும் பலபேரையும் தட்டிக்கழித்துக் கொண்டே இருக்கிறார்கள். இவ்வாறு செய்கிறவர் பொறுப்பாளர் எனும் தகுதியை இழந்துவிடுவார்! அவருக்கு அடுத்த நிலையிலுள்ள ஏனைய பொறுப்பாளர்கள் அவளை மணம் முடித்துக் கொடுக்க முன் வர வேண்டும். அவர்களில் மிக நெருங்கிய உறவு உடையவர்கள் வரிசையாகப் பொறுப்பாளராய் வருவார்கள்.

## 4 - மணமகளின் பண்புகள்

திருமணத்தின் நோக்கம் - நாம் முன்னர் குறிப்பிட்டது போன்று - சுகம் அனுபவிப்பதும் நல்லதொரு குடும்பத்தை - சிறப்பான தொரு சமுதாயத்தை உருவாக்குவதும் ஆகும்.

இதன்படி இந்த இரண்டு நோக்கங்களை நிறைவேற்றும் தகுதி உள்ள பெண்ணே திருமணம் செய்து கொள்ளத்தக்க பெண்மணி ஆவாள். அதாவது அவள் புற அழகும் அக அழகும் பெற் றிலங்கிட வேண்டும்.

**புற அழகு:** உடல் ரீதியான ஆரோக்கியம். ஒருபெண் அழகுத் தோற்றம் உடையவளாக, இனிய சொல்லுடையவளாக இருந்தால் அவளைக் காண்பதன் மூலம் கண் குளிர்ச்சி அடையும். அவளது இனிய பேச்சுக்காக காதுகள் ஏங்கும். அவளுக்காக இதயம் மலரும். நெஞ்சில் நிம்மதி பொங்கும்.அவளிடம் மனம் சாந்திபெறும். அல்லாஹ்வின் பின்வரும் கூற்று அவளைப் பொறுத்து உறுதிப்படும்.

قال الله : وَمِنْ آيَاتِهِ أَنْ خَلَقَ لَكُمْ مِنْ أَنْفُسِكُمْ أَزْوَاجًا لِتَسْكُنُوْااِلَيْهَا وَجَعَلَ بَيْنَكُمْ مَوَدَّةً وَّ رَحْمَةً (سورة الروم الآية:٢١)

“மேலும் அவனின் (அதாவது இறைவனின்) சான்றுகளில் இதுவும் ஒன்று: அவன் உங்களுக் காக உங்கள் இனத்திலிருந்தே மனைவியரைப் படைத்தான்., நீங்கள் அவர்களிடம் மனஅமைதி பெற வேண்டும் என்பதற்காக! மேலும் உங்களிடையே அன்பையும் கருணையையும் தோற்று வித்தான் (30 : 21)

**அக அழகு:** இறைமார்க்கப்பற்றும் நற்பண்பும் நிறைந்திருத்தல். ஒருபெண் எந்த அளவுக்கு இறைமார்க்கப்பற்று மிகுந்தவளாகவும் நிறை குணம் உடையவளாகவும் இருக்கிறாளோ அந்த அளவுக்கு அன்பிற்கும் பாசத்திற்கும் உரிய வளாக இருப்பாள். நற்பேறுடையவளாகத் திகழ் வாள்.

இறைமார்க்கத்தில் பற்றுமிக்க பெண்மணி அல்லாஹ்வின் கட்டளைகளை நிறைவேற்றக் கூடியவளாகத் திகழ்வாள். கணவனின் உரிமைகள், அவனது சொத்துகள், குழந்தைகள் மற்றும் தனது கற்பு ஆகியவற்றைப் பாதுகாத்து வருவாள். அல்லாஹ்வுக்குக் கீழ்ப்படிந்து வாழ்வதில் கணவனுக்கு உதவியாக இருப்பாள். அவனுக்கு மறதி ஏற்பட்டால் அவள் நினைவுபடுத்துவாள். அவன் சோர்வடையும்போது அவள் உற்சாகமூட்டுவாள். அவன் கோபம்கொண்டால் அவள் சாந்தப்படுத்துவாள்.

நல்லொழுக்கம் நிறைந்த பெண்மணி தன் கணவனிடம் அன்பாகவும் அதிக நெருக்கமாகவும் இருக்க முயற்சி செய்வாள். கணவனை மதித்து நடப்பாள். எந்த விஷயத்தில் அவள் முந்தி நிற்க வேண்டுமென அவன் விரும்புகிறானோ அதில் அவள் பிந்த மாட்டாள். எங்கு பிந்தி நிற்க வேண்டுமென அவன் விரும்புகிறானோ அங்கு முந்த மாட்டாள்.

وَلَقَدْ سُئِلَ النَّبِيُّ ﷺ ايُّ النِّسَاءِ خَيْرٌ؟ قَالَ : اَلَّتِى تَسُرُّهُ اِذَا نَظَرَ ، وَ تُطِيْعُهُ اِذَا اَمَرَ ، وَلاَ تُخَالِفُهُ فِى نَفْسِهَا وَ لاَ مَالِهِ بِمَا يَكْرَهُ

"ஒரு தடவை நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் எந்தப்பெண் மிகவும் சிறந்தவள்? என வினவப்பட்டது. அதற்கு நபியவர்கள் பதிலளித்தார்கள்: கணவன் பார்க்கும்போது மகிழ்ச்சியளிப் பவள்.,அவனது ஆணைக்குக் கீழ்ப்படிபவள்., தன் கற்பிலும் கணவனின் பொருட்களிலும் அவன் விரும்பாதவற்றைச் செய்யாமலும் அவனுக்கு மாறுபட்டு நடக்காமலும் இருப்பவள்"

قال النبي ﷺ : تَزَوَّجُوْا الْوَدُوْدَ الْوَلُوْدَ فَاِنِّى مُكَاثِرٌ بِكُمُ الْاَنْبِيَاءَ أَوْ قَالَ : الْاُمَمَ

மற்றொரு தடவை சொன்னார்கள்: "அதிகம் அன்பு செலுத்தக்கூடிய, பிள்ளைகளை அதிகம் பெற்றெடுக்கக்கூடிய பெண்ணைத் திருமணம் முடியுங்கள். ஏனெனில் நான் உங்களின் மூலம் ஏனைய நபிமார்களுக்கு மத்தியில் அதிக அளவு உம்மத்- சமுதாயத்திரைப் பெற்றவனாகத் திகழ் வேன்"

புறஅழகும் அகஅழகும் ஒருங்கே அமையப் பெற்ற பெண்ணை மனைவியாகப் பெற்றிட முடிந் தால் அது அல்லாஹ்வின் பேருதவியினால் கிடைக்கும் நற்பேறாகும்.முழுமையான நிலையாகும்.

## 5 - திருமணத்தின் காரணமாக விலக்கப்படும் பெண்கள்

قال النبي ﷺ : اِنَّ اللهَ فَرَضَ فَرَائِضَ فَلاَ تُضَيِّعُوْهَا وَحَدَّ حُدُوْدًا فَلاَ تَعْتَدُوْهَا

அண்ணல் நபி (ஸல்)அவர்கள் அருளினார்கள்: "திண்ணமாக அல்லாஹ் சில காரியங்களைக் கடமையாக்கியுள்ளான்.அவற்றைப் பாழாக்கிவிடாதீர்கள். சில வரம்புகளை நிர்ணயித்துள்ளான். அவற்றை மீறாதீர்கள்"

அல்லாஹ் நிர்ணயித்துள்ள இத்தகைய வரம்புகளில் ஒன்றுதான் திருமணம் என்பதும். அதன் நிர்ணயம் ஹலால்-ஹராம் (ஆகுமாகுதல், விலக்கப்படல் எனும்) இரு நிலைகளிலும் உள்ளது.

குடும்ப பந்தம், பால்குடி பந்தம், திருமண உறவு போன்ற காரணங்களினால் அல்லாஹ் சில குறிப்பிட்ட பெண்களை ஒருமனிதனுக்கு விலக்கப்பட்டவர்களாக ஆக்கியுள்ளான்.

அப்படி ஒரு மனிதன் திருமணம் செய்யக்கூடாதென விலக்கப்பட்ட பெண்கள் இரு வகை யினராவர்.

1) நிரந்தரமாக விலக்கப்பட்டவர்கள்.
2) குறிப்பிட்ட காலம் வரை விலக்கப் பட்டவர்கள்.

### நிரந்தரமாக விலக்கப்பட்டவர்கள்:

இவர்கள் 3 வகையினர்:

1) குடும்பப் பந்தத்தினால் விலக்கப்பட்டவர்கள்.

இவர்கள் ஏழுவகைப் பெண்கள். இவர்கள் பற்றி குர்ஆனில் அந்நிஸா 4 ஆம் அத்தியாயத் தில் அல்லாஹ் இவ்வாறு கூறுகிறான் :

قال الله تعالى: حُرِّمَتْ عَلَيْكُمْ اُمَّهَاتُكُمْ وَبَنَاتُكُمْ وَ أَخَوَاتُكُمْ وَ عَمَّاتُكُمْ وَ خَالاَتُكُمْ وَبَنَاتُ الْأَخِ وَ بَنَاتُ الْأُخْتِ (النساء الآية:٢٣)

" (இந்தப் பெண்களை மணம்புரிவது) உங்களுக்கு விலக்கப்பட்டுள்ளது: உங்கள் அன்னை யர், உங்கள் புதல்விகள், உங்கள் சகோதரிகள், உங்கள் தந்தையின் உடன்பிறந்த சகோதரிகள், உங்கள் அன்னையின் உடன்பிறந்த சகோதரிகள், சகோதரரின் புதல்விகள், சகோதரியின் புதல்வி கள்" (4 : 23)

அ. அன்னையர்: இவர்களில் தாயும் பாட்டிகளும் சேருவர். தந்தைவழிப் பாட்டிகளாயினும் தாய்வழிப் பாட்டிகளாயினும் சரியே!

ஆ. புதல்விகள்: இவர்களில் சொந்தப் புதல்விகளும் மகன்வழிப் பேத்திகளும் மகள் வழிப் பேத்திகளும் அடங்குவர்.

இ. சகோதரிகள்: இவர்களில் உடன் பிறந்த சகோதரிகளும் தந்தைவழிச் சகோதரிகளும் தாய் வழிச் சகோதரிகளும் அடங்குவர்.

ஈ.தந்தையின் சகோதரிகள்: இவர்களில் பாட்டனின் சகோதரிகளும் பூட்டனின் சகோதரிகளும் மற்றும் தாய்வழிப் பாட்டனின் சகோதரிகளும் தாய்வழிப் பூட்டனின் சகோதரிகளும் அடங்குவர்.

உ. உங்கள் அன்னையின் சகோதரிகள்: இவர்களில் பாட்டனின் சகோதரிகளும் பூட்டனின் சகோதரிகளும் மற்றும் தாய்வழிப் பாட்டனின் சகோதரிகளும் தாய்வழிப் பூட்டனின் சகோதரிகளும் அடங்குவர்.

ஊ. சகோதரரின் புதல்விகள்: இவர்களில் உடன்பிறந்த சகோதரரின் புதல்விகளும் தந்தை வழிச்சகோதரரின் புதல்விகளும் தாய்வழிச் சகோதரரின் புதல்விகளும் மற்றும் அவர்களின் மகன் வழிப் பேத்திகளும் மகள் வழிப்பேத்திகளும் அடங்குவர்.

எ. சகோதரியின் புதல்விகள்: இவர்களில் உடன்பிறந்த சகோதரியின் புதல்விகளும் தந்தை வழிச் சகோதரியின் புதல்விகளும் தாய்வழிச் சகோதரியின் புதல்விகளும் மற்றும் அவர்களின் மகன்வழிப் பேத்திகளும் மகள்வழிப் பேத்திகளும் அடங்குவர்.

2. பால்குடி உறவினால் திருமணத்திற்கு விலக்கப்படும் பெண்கள் (இவர்கள் குடும்ப உறவினால் விலக்கப்பட்ட பெண்களைப்போன்ற வராவர்)

قال النبي ﷺ : يَحْرُمُ مِنَ الرَّضَاعِ مَا يَحْرُمُ مِنَ النَّسَبِ

அண்ணல் நபி (ஸல்) அவர்கள் அருளினார்கள்: "குடும்பப் பந்தத்தினால் விலக்கப்படும் பெண்கள் பால்குடி உறவினாலும் (திரு மணத்திற்கு) விலக்கப்படுவார்கள்"

ஆனாலும் திருமணத்தை விலக்கி வைக்கும் பால்குடிக்குச் சில நிபந்தகைள் உள்ளன.

அ. பால்குடித்தல் என்பது ஐந்து தடவை களும் அதற்கு அதிகமாகவும் இருக்க வேண்டும்.

- எனவே ஒரு குழந்தை ஒரு பெண்ணிடத்தில் நான்கு தடவை பால்குடித்தால் அவள் அந்தக் குழந்தைக்குத் தாயாக மாட்டாள்.

ஏனெனில் இமாம் முஸ்லிம் (ரஹ்) அவர்கள் ஆயிஷா (ரலி) அவர்களின் இந்த அறிவிப்பைப் பதிவு செய்துள்ளார்கள்: "திருமணத்தை விலக்கி வைக்கும்படியான அறியப்பட்ட பத்து முறை பால் குடித்தல்கள் தொடர்பான வசனங்களே குர்ஆனில் முதலில் இறக்கியருளப்பட்டன. பிறகு அவை அறியப்பட்ட ஐந்துமுறை பால்குடித்தல் உடைய வசனங்களின் மூலம் மாற்றப்பட்டு விட்டன. (ஐந்துமுறை பால்குடித்தல் உடைய) இந்த வசனங்கள் ஓதப்பட்டு வந்த நிலையில் நபி (ஸல்) அவர்கள் மரணம் அடைந்தார்கள்"

ஆ. பால்குடித்தல் என்பது பால்குடி மறக்கடிக்கப்படும் பருவத்திற்கு முன்னதாக இருக்க வேண்டும். அதாவது, குழந்தை பால்குடி மறக்கும் பருவத்திற்கு முன்னர் ஐந்து தடவை பால் குடித்திருக்க வேண்டும் என்று நிபந்தனை விதிக்கப்படுகிறது. பால்குடி மறந்த பின்பு ஐந்து தடவை பால் குடித்திருந்தாலோ அல்லது சில தடவை பால்குடி மறப்பதற்கு முன்பும் இன்னும் சில தடவை அதற்குப் பின்பும் இருந்தாலோ அந்தப்பெண் அந்தக் குழந்தைக்குத் தாய் ஆக மாட்டாள்.

பால்குடியின் நிபந்தனைகள் நிறைவடைந்து விட்டால் குழந்தை - பால் கொடுத்த அந்தப் பெண்ணின் பிள்ளையாகி விடுகிறது. அவளுடைய பிள்ளைகள் அந்தக் குழந்தைக்குச் சகோ தரர்களாகி விடுகின்றனர். அந்தப் பிள்ளைகள் இந்தப் பால்குடிக்கு முன்னர் பிறந்தவர்களா யினும் சரி அதன் பின்னர் பிறந்தவர்களாயினும் சரியே! மேலும் அந்தப் பாலுக்குக் காரணதாரரா கிய அந்தக் கணவனின் எல்லாப் பிள்ளைகளும் பால்குடித்த குழந்தைக்குச் சகோதரர்களாகி விடு கின்றனர். அந்தப் பிள்ளைகள் பால் கொடுத்த அந்தப் பெண்ணுக்குப் பிறந்தவர்களாயினும் அவரது இன்னொரு மனைவிக்குப் பிறந்தவர்களாயினும் சரியே!

இங்கு ஒன்றை நாம் அறிந்து கொள்வது அவசியம். பால்குடித்த 'குழந்தை'யின் பிள்ளை களைத் தவிர அதன் உறவினர் எவருக்கும் இந்தப் பால்குடி விஷயத்தில் எந்தத் தொடர்பும் கிடையாது. அது அவர்களில் எந்தப் பாதிப்பையும் ஏற்படுத்தார்.

எனவே அந்தக் குழந்தையின் குடும்ப பந்த உடைய சகோதரன் அதன் பால்குடித் தாயைத் திருமணம் செய்வது கூடும். அதன் பால்குடிச் சகோதரியைத் திருமணம் செய்வதும் கூடும்.

ஆனால் பால்குடித்த 'குழந்தை'யின் சந்ததிகள் (பிள்ளைகள்) பாலூட்டிய அந்தப் பெண்ணுக் கும் அந்தப் பாலுக்குக் காரணதாரராகிய கணவருக்கும் பிள்ளைகள் போன்றாவார்கள்.

3) திருமண உறவின் காரணமாக விலக் கப்பட்டவர்கள்.

அ. தந்தை மற்றும் பாட்டனின் மனைவியர்:

-பூட்டனின் மனைவி, அவருடைய தந்தையின் மனைவி என்று இன்னும் மேலே போனா லும் சரியே! -அவர்கள் தந்தைவழிப் பாட்டனாக இருந்தாலும் தாய்வழிப் பாட்டனாக இருந்தா லும் சரியே! ஏனெனில் அல்லாஹ் குர்ஆனில் கூறுகிறான்:

قال الله تعالى: وَلاَ تَنْكِحُوْا مَا نَكَحَ آبَاءُكُمْ مِنَ النِّسَاءِ (سورة النساء الآية: ٢٢)

" உங்கள் தந்தையர் மணம் புரிந்திருந்த பெண்களை நீங்கள் மணம் புரியாதீர்" (4 : 22)

ஒரு மனிதன் ஒரு பெண்ணைத் திருமணம் செய்து ஒப்பந்தம் நிறைவேறி விடுகிறபோது - அவளுடன் அவன் உடலுறவு கொண்டாலும் சரி, உடலுறவு கொள்ளாவிட்டாலும் சரியே - அவனுடைய புதல்வர்களின் மீதும் மகன்வழிப் பேரன்களின் மீதும் மகள்வழிப்பேரன்களின் மீதும் அந்தப்பெண் (ஹராம்) விலக்கபட்டவளாகி விடுகிறாள்., பேரன்களின் புதல்வர்கள், அந்தப் புதல் வர்களின் புதல்வர்கள் என்று எவ்வளவு இறங்கு வரிசையில் போனாலும் சரியே!

ஆ. புதல்வர்களின் மனைவியர். - பேரன்களின் மனைவியர், கொள்ளுப் பேரன்களின் மனைவியர் என்று எவ்வளவு இறங்கு வரிசையில் போனாலும் சரியே! ஏனெனில் திருக்குர்ஆனில் அல்லாஹ் கூறுகிறான்:

قال الله : وَحَلاَئِلُ أَبْنَائِكُمُ الَّذِيْنَ مِنْ أَصْلاَبِكُمْ (النساء الاية: ٢٣)

"உங்கள் முதுகந்தண்டுகளில் இருந்து பிறந்த உங்கள் புதல்வர்களின் மனைவியரை (நீங்கள் திருமணம் செய்வதும் விலக்கப்பட்டுள்ளது)" (4 : 23)

ஒரு மனிதன் ஒரு பெண்ணைத் திருமணம் செய்து ஒப்பந்தம் நிறைவேறிவிட்டால் அவள் அவனது தந்தை மீதும் பாட்டனார்களின் மீதும் (ஹராம்) விலக்கப்பட்டவளாகி விடுகிறாள்., பாட்டனார்களில் - பூட்டன், பூட்டனின் பாட்டன் என எவ்வளவு மேலே சென்றாலும் சரி எல்லாப் பாட்டன்களும் அடங்குவர்! அவர்கள் தந்தை வழிப்பாட்டனாக இருந்தாலும் தாய்வழிப்பாட்டனாக இருந்தாலும் சரியே! திருமண ஒப்பந்தத்தின் மூலம் மட்டுமே அவர்கள் மீது அவள் விலக்கப் பட்டவளாகி விடுகிறாள். அவளுடன் அவன் உடலுறவு கொள்ளவில்லை என்றாலும் சரியே!

இ. மனைவியின் தாய் மற்றும் அவளுடைய பாட்டிகள்: பாட்டியின் தாய், பாட்டியின் பாட்டி என்று மேலே சென்றாலும் சரியே!

ஏனெனில் அல்லாஹ் குர்ஆனில் கூறுகிறான்: "உங்கள் மனைவியரின் அன்னைரை திருமணம் செய்வதும் (உங்கள் மீது விலக்கப்பட்டுள்ளது) " (4 : 23)

ஒரு மனிதன் ஒரு பெண்ணைத் திருமணம் செய்து ஒப்பந்தம் நிறைவேறி விட்டால் அவளுடைய அன்னையும் பாட்டிகளும் அவன் மீது விலக்கப்பட்டவர்களாகி விடுகிறார்கள். அவளுடன் அவன் உடலுறவு கொள்ளவில்லை என்றா லும் சரியே! பாட்டிகள், தந்தைவழிப் பாட்டிகளாக இருந்தாலும் தாய்வழிப் பாட்டிகளாக இருந் தாலும் சரியே!

ஈ. மனைவியின் புதல்விகள்:

இவர்களில் அவளுடைய மகன்வழிப் பேத்திகளும் மகள்வழிப் பேத்திகளும் அடங்குவர். இவர்கள் வளர்ப்புப் புதல்விகளாவர்(அதாவது மனைவியின் புதல்விகளாவர்) அவர்களின் மகள்கள் - பேத்திகளும் ஆவர்.ஆனால் ஒரு நிபந்தனை: அவர் தனது மனைவியுடன் உடலுறவு கொண்டிருக்க வேண்டும். உடலுறவுக்கு முன்னதாக மணமுறிவு ஏற்பட்டுவிட்டால் அவளது புதல்விகளை மணம்புரிவது அவன் மீது விலக்கப்பட மாட்டாது. அல்லாஹ் குர்ஆனில் கூறியுள்ளான்:

قال الله تعالى: وَرَبَائِبُكُمُ اللاَّتِى فِى حُجُوْرِكُمْ مِنْ نِسَائِكُمُ اللاَّتِى دَخَلْتُمْ بِهِنَّ فَإِنْ لَّمْ تَكُوْنُوْا دَخَلْتُمْ بِهِنَّ فَلاَ جُنَاحَ عَلَيْكُمْ

(سورة النساء الآية: ٢٣)

" மேலும் நீங்கள் உடலுறவு கொண்ட மனைவியர் (தம் முன்னாள் கணவர் மூலம்) பெற்றெடுத்த மேலும் உங்கள் மடிகளில் வளர்ந்த உங்கள் புதல்விகளைத்திருமணம் செய்வதும் (உங்களுக்கு விலக்கப்பட்டுள்ளது) ஆனால் (திருமணமாகி) நீங்கள் அந்த மனைவியருடன் உடலுறவு கொள்ளவில்லை எனில் (அவர்களை விடுத்து அவர்களின் புதல்விகளை மணமுடித்துக் கொள்வதில்) உங்கள் மீது எத்தகைய குற்றமும் இல்லை" (4 : 23)

ஒரு மனிதன் ஒரு பெண்ணைத் திருமணம் செய்து அவளுடன் உடலுறவு கொண்டால் அவ ளுடைய புதல்விகளும் பேத்திகளும் அவன் மீது (ஹராம்) விலக்கப்பட்டவர்களாகி விடுவர். அவ ளின் முந்தைய கணவரின் மூலம் பிறந்தவர் களாயினும் சரி, அவனுக்குப் பின்னர் (அதாவது அவன் மணவிலக்கு செய்த பின்னர்) அவள் மறுமணம் செய்துகொண்ட கணவரின் மூலம் பிறந்தவர்களாயினும் சரியே!

ஆனால் உடலுறவுக்கு முன்பே மணமுறிவு ஏற்பட்டு விட்டால் அவளுடைய புதல்விகளும் பேத்திகளும் அவன் மீது (ஹராம்) விலக்கப்பட்டவர்களாக மாட்டார்கள்.

2. குறிப்பிட்ட காலம் வரை விலக்கப்பட்டவர்கள்:

- இந்தப் பெண்களில் பல வகையினர் உள்ளனர்: அ. மனைவியின் சகோதரி. மனைவியின் தந்தையின் சகோதரி. (அதாவது மனைவியின் அத்தை) அவளுடைய தாயின் சகோதரி, (அதாவது சின்னம்மா, பெரியம்மா) ஆகியோர். அவனுக்கும் அவன் மனைவிக்கும் பிரிவு ஏற்படும் வரையில் இந்தப் பெண்களைத் திருமணம் செய்வது அவன் மீது விலக்கப்பட்டுள்ளது. அந்தப் பிரிவு அவளது மரணத்தினால் ஏற்பட்டாலும் சரிஅல்லது மணவிலக்கு நிகழ்ந்து இத்தா காலம் கழிந்ததால் ஏற்பட்டாலும் சரியே! குர்ஆனில் அல்லாஹ் கூறுகிறான் :

قال الله تعالى :وَ اَنْ تَجْمَعُوْا بَيْنَ الْأُخْتَيْنِ (النساء الآية : ٢٣)

"இரண்டு சகோதரிகளை நீங்கள் ஒருசேர மனைவிராக்குவதும் தடைசெய்யப்பட்டுள்ளது"(4: 23)

மேலும் அண்ணல் நபி (ஸல்)அவர்கள் கூறியுள்ளார்கள்:

قال النَّبِيُّ ﷺ : لاَ تَجْمَعُوْا بَيْنَ الْمَرْأَةِ وَ عَمَّتِهَا وَ لاَ بَيْنَ الْمَرْأَةِ وَ خَالَتِهَا ( متفق عليه )

“ஒரு பெண்ணையும் அவளுடைய தந்தையின் சகோதரியையும் ஒருசேர மனைவியராக ஆக்குவதும் கூடாது. ஒருபெண்ணையும் அவளுடைய தாயின் சகோரரியையும் ஒருசேர மனைவி யராக்குவதும் கூடாது” (நூல்: புகாரி, முஸ்லிம்)

ஆ. இத்தாவில் இருப்பவள்.

அதாவது ஒரு பெண் அவளுடைய கணவரால் மணவிலக்கு செய்யப்பட்டு இத்தா காலம் கழியாதிருந்தால் அந்தக் காலம் கழியும் வரையில் அவளைத் திருமணம் செய்வது கூடாது. இதேபோன்று இத்தா நிலையிலுள்ள பெண்ணுடன் மறுமணம் செய்வதற்கான பேச்சு வார்த்தை நடத்துவது கூடாது.,இத்தா காலம் கழியும் வரையில்!

இ. ஹஜ், உம்றா காரணமாக திருமணத்திற்கு விலக்கப்பட்ட பெண்.

- இப்படிப்பட்ட பெண்ணைத் திருமணம் செய்வது கூடாது., (ஹஜ் - உம்றாவுக்கான) இஹ்ரா மில் இருந்து விடுவடும் வரையில்!

இவ்வாறு தற்காலிகமாகத் திருமணம் விலக் கப்படும் பெண்களின் வரிசை அதிகமாக இருப்ப தால் அவர்களைப் பற்றி கூறுவதை இங்கு தவிர்த்து விட்டோம்.

ஆனால் மாதவிடாய் ஒரு பெண்ணின் மீது திருமண உடன்படிக்கை நிகழ்வதைத் தடை செய்யாது. மாதவிடாய் காலத்திலும் அவள் திரு மணம் புரியலாம். ஆனால் மாதவிடாய் நின்று தூய்மையாகி குளிக்காத வரையில் அவளுடன் உடலுறவு செய்வது கூடாது.

## 6 - எத்தனை பெண்களைத் திருமணம் செய்யலாம்?

ஒரு மனிதன் தனது விருப்பப்படி எத்தனை பெண்களை வேண்டுமானாலும் மணம் பரிந்து கொள்ளலாம்.,அதற்கு எந்த வரையறையுமில்லை என்று கூறுவது அநீதிக்கும் தான்தோன்றித் தனத்திற்கும் வழிவகுத்து விடும். மனைவியரின் உரிமைகளை-ஆசாபாசங்களை நிறைவேற்ற இய லாத நிலையை ஏற்படுத்திவிடும்.

இதேபோன்று ஒருமனிதன் ஒரு பெண்ணை மட்டும்தான் திருமணம் செய்ய வேண்டும் என்று கட்டுப்படுத்துவதும் தீமைக்குத்தான் வழிவகுக்கும். விலக்கப்பட்ட,தவறான வழியில் தன் இச்சையைத் தீர்த்துக் கொள்ளுமாறு அவனைத் தூண்டும்.

இந்நிலையில் இஸ்லாம் பலதார மணத்திற்கு அனுமதியளித்தது. ஆனாலும் நான்கு பெண் களை மட்டும் என வரையறுத்தது. ஏனெனில் ஒரு மனிதன் இந்த வரையறைக்குள் நின்று நீதி நேர்மையைக் கடைப்பிடிக்க முடியும். மனைவியின் உரிமையை நிறைவேற்றுவதும் சாத்திய மாகும். ஒன்றுக்கு அதிகமான திருமணத்தின் நிர்பந்த நிலை என வரும்போது அதையும் பூர்த்தி யாக்கிக் கொள்ள முடியும். அல்லாஹ் கூறுகிறான்:

قال الله تعالى: فَانْكِحُوْا مَا طَابَ لَكُمْ مِنَ النِّسَاءِ مَثْنٰى وَ ثُلَاثَ وَ رُبَاعَ فَاِنْ خِفْتُمْ اَلاَّ تَعْدِلُوْا فَوَاحِدَةً (النساء الآية: ٣)

“உங்களுக்கு விருப்பமான இரண்டு பெண்களையோ மூன்று பெண்களையோ நான்கு பெண் களையோ திருமணம் முடித்துக் கொள்ளுங்கள். ஆனால் (அவர்களிடையே) நீதமாக நடந்திட இயலாது என்று நீங்கள் அஞ்சுவீர்களாயின் ஒரு பெண்ணை மட்டும் திருமணம் முடித்துக் கொள்ளுங்கள் (4 : 3)

அண்ணல் நபி (ஸல்)அவர்களின் காலத்தில் ஃகைலான் ஸகஃபீ என்பவர் இஸ்லாத்தைத் தழுவினார்.அப்போது அவர் பத்து பெண்களைத் திருமணம் செய்திருந்தார். அந்தப் பெண்களில் நால்வரைத் தேர்ந்தெடுத்துக் கொண்டு மற்றவர்களை மணவிலக்கு செய்திடுமாறு அவருக்கு நபி (ஸல்) அவர்கள் கட்டளையிட்டார்கள்.

கைஸ் இப்னு ஹாரிஸ் (ரலி)அவர்கள் சொல்கிறார்: “நான் இஸ்லாத்தைத் தழுவினேன். அப்பொழுது என்னிடம் எட்டு மனைவியர் இருந்தனர். நபி (ஸல்) அவர்களிடம் வந்து விவரத் தைக் கூறினேன். ‘அவர்களில் நால்வரைத் தேர்ந்தெடுத்துக் கொள்’ என்று நபியவர்கள் கூறி னார்கள்.

1 -நான்கு தாரங்கள் என வரையறுத்ததன் பயன்கள் வருமாறு:

அ. சில நேரங்களில் அது ஓர் இன்றியமையாத தேவையாகிறது. எடுத்துக்காட்டாக,மனைவி வயது முதிர்ந்தவளாக அல்லது நீடித்த நோயாளியாக இருக்கிறாள்., இந்நிலையில் அவளோடு தான் அவன் வாழ்ந்தாக வேண்டும், வேறு திருமணம் செய்யக்கூடாது என்றிருந்தால் தனது கற்பையும் ஒழுக்கத்தையும் அவனால் பாதுகாக்க முடியாது போகும்!

அவள் அவனோடு வாழ்ந்து பல பிள்ளைகளுக்குத் தாயாகிவிட்டிருக்கலாம். இந்நிலையில் மணவிலக்கு செய்தால் பிள்ளைகளை விட்டு அவளைப் பிரிக்க வேண்டியது வரும். அவளை மட்டுமே மனைவியாக வைத்துக் கொண்டால், மறுமணம் செய்யாது கஷ்டப்பட நேரிடும் என்று அஞ்சுகிறான். அல்லது விபச்சாரத்தில் வீழ்ந்து விடுவோம் என்று அஞ்சுகிறான். இத்தகைய சிக்கல் பலதார மணத்தை ஆகுமாக்கினாலே தவிர தீராது!

ஆ. திருமணம், மக்களுக்கு மத்தியில் உறவையும் பிணைப்பையும் ஏற்படுத்தும் காரணியாக உள்ளது. திருமணத்தைக் குடும்ப பந்தத்திற்கு நிகரான அந்தஸ்துடையதாக அல்லாஹ் ஆக்கியுள்ளான். அல்லாஹ் குர்ஆனில் கூறுகிறான்:

قال الله تعالى: وَهُوَ الَّذِى خَلَقَ مِنَ الْمَاءِ بَشَرًا فَجَعَلَهُ نَسَبًا وَّ صَهْرًا ( سورة الفرقان الآية: ٥٤)

“ மேலும் நீரிலிருந்து மனிதனைப் படைத்தவன் அவனே. பிறகு குடும்ப பந்தத்தின் மூலமாகவும் திருமண உறவின் மூலமாகவும் இருவகையான உறவுமுறைகளை அவனுக்கு ஏற்படுத்தினான்” (25 : 54)

ஆக, பலதார மணம் என்பது பல குடும்பங்களுக்கு மத்தியில் உறவை ஏற்படுத்துகிறது. அவர்களைச் சிலருடன் சிலரை இணைத்துவைக்கிறது. ஒன்றுக்கு அதிகமான பெண்களைத் திருமணம் செய்யுமாறு நபி(ஸல்) அவர்களைத் தூண்டிய பல காரணிகளுள் இதுவும் ஒன்று.

இ. பலதார மணத்தின் விளைவாகப் பெண்களுக்குப் பாதுகாப்புக் கிடைக்கிறது. உணவு, உடை, இருப்பிடம்போன்ற அவர்களின் தேவைகளும் நிறைவேறுகின்றன. இதேபோல் பிள்ளைகளின் அதிகரிப்பும் சந்ததிப் பெருக்கவும் நிகழ்கிறது. இது ஷரீஅத்தின் விருப்பமாகவும் நோக்கமாகவும் இருக்கிறது.

4) ஆண்களில் சிலர் வேகமான இச்சை கொண்டவர்களாய் இருக்கிறார்கள். ஒரே ஒரு மனைவி அவர்களுக்குப் போதுமாகுவதில்லை. அவர்கள் பயபக்தியும் பரிசுத்தமும் உடையவர்களாய் வாழ்கிறார்கள். விபச்சாரம் குறித்து அச்சப்படுகிறார்கள். ஆனால் தம் சிற்றின்ப வேட்கையினை ஆகுமான வழியில் தீர்த்துக் கொள்ள விரும்புகிறார்கள். அல்லாஹ்வின் பேரருள் இத்தகைய மனிதர்களுக்குச் சீரான முறையில் பலதாரம்மணம் புரிந்துகொள்வதை ஆகுமாக்கிக் கொடுத்துள்ளது.

## 7 - திருமணத்தின் தத்துவம்

இது தொடர்பாகப் பேசத் தொடங்குவதற்கு முன் ஒன்றை உறுதியாக நாம் அறிந்து கொள்வது அவசியம். அதாவது. இஸ்லாமிய ஷரீஅத் சட்டங்கள் அனைத்தும் தத்துவார்த்தமானவை. ஒவ்வொரு சட்டமும் பொருத்தமாகவே அமைந்துள்ளது. எந்த ஒருசட்டமும் வீணானதோ மூடத்தனமானதோ அல்ல. அதற்குக் காரணம் இந்தச் சட்டங்கள் அனைத்தும் எல்லாம் அறிந்தவனும் நுண்ணறிவாளனுமாகிய இறைவனிடம் இருந்து அருளப்பட்டிருப்பதே!
ஆனால் (இந்தச் சட்டங்களில் உள்ள) எல்லாத் தத்துவங்களையும் எல்லா மனிதர்களாலும் அறிய முடியுமா என்றால் - சந்தேகமின்றி மனிதனின் கல்வியும் அறிவும் சிந்திக்கும் திறனும் ஒரு வரையறைக்குட்பட்டவைதான்! எனவே அனைத்து விஷயங்களையும் அவனால் அறிந்து கொள்ள முடியாது. அதற்குத் தேவையான முழுஞானம் அவனுக்கு வழங்கப்படவில்லை. அல்லாஹ் திருக்குர்ஆனில் கூறுவது போன்று:

قال الله : وَمَا اُوْتِيْتُمْ مِنَ الْعِلْمِ اِلاَّ قَلِيْلاً ( الاسراء الآية: ٨٥)

“ஞானத்தில் இருந்து மிகக் குறைந்த அளவே உங்களுக்கு வழங்கப்பட்டுள்ளது” (17 : 85)

ஆகையால் அல்லாஹ் தன் அடியார்களுக்காக என்னென்ன ஷரீஅத் சட்டங்களை வகுத்துத் தந்துள்ளானோ அவற்றை முழு மனத்துடன் ஏற்றுக் கொள்வது நம்மீது கடமையாகும். அவற்றின் தத்துவங்கள் நமக்குத்தெரிந்தாலும் தெரியா விட்டாலும் சரியே! ஏனெனில் அந்த நுணுக்கங்கள் நமக்குத் தெரியவில்லை என்பதால் உண்மையில் அவற்றிற்கு எந்தத் தத்துவமே இல்லை என்பதல்ல., மாறாக நமது அறிவும் சிந்தனையும் அந்தத் தத்துவங்களைப் புரிந்திட முடியாத வகையில் குன்றியவை என்பதே உண்மை!

திருமணத்தின் தத்துவங்கள்

1) கணவன் - மனைவி இருவரின் பாதுகாப்பு.

-அண்ணல் நபி (ஸல்) அவர்கள் அருளினார்கள்: “இளைஞர் சமுதாயமே! உங்களில் யார் திருமணம் செய்ய சக்திபெற்றிருக்கிறாரோ அவர் திருமணம் செய்து கொள்ளட்டும். ஏனெனில் திருமணம், பார்வையைத் தாழ்த்தக் கூடியது. வெட்கத்தலத்தைப் பாதுகாக்கக் கூடியது”

2) தீமைகள் மற்றும் ஒழுக்கச் சீரழிவில் இருந்து சமுதாயத்தைப் பாதுகாத்தல்.

- திருமணம் இல்லையெனில் ஆண்கள் - பெண்களிடையே தீமையும் ஒழுக்கச் சீரழிவும் பெருமளவு பரவி விடும்!

3) கணவன் - மனைவி இருவரும் ஒருவர் மற்றவரின் மூலம் இன்பம் அனுபவித்தல்.

இது, கணவன் - மனைவி என்கிற உறவின் அடிப்படையில் இருவர் மீதும் சில பொறுப்புகளும் உரிமைகளும் கடமையாகுவதைப் பொறுத்ததாகும்.

மனைவிக்குப் பொறுப்பாளனாக கணவன் இருக்கிறான்., அவளுடைய உணவு, இருப்பிடம் போன்ற தேவைகளுக்கு நல்ல முறையில் ஏற்பாடு செய்வான்.

அண்ணல் நபி(ஸல்)அவர்கள் அருளினார்கள்: " மனைவியருக்கு நல்ல முறையில் உணவும் உடையும் வழங்குவது உங்கள் மீது கடமை"

இதேபோன்று வீட்டின் அத்தியாவசியப் பணி களைக் கவனித்தல், பாராமரிப்பது, கணவருக்குப் பணிவிடைசெய்வது, குழந்தைகளின் கல்வி, பரா மரிப்பு போன்றவற்றிற்கு மனவை பொறுப்பு ஏற்கிறாள்.

நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்: "மனைவி, அவளுடைய கணவனது வீட்டின் பொறுப்பாளி யாவாள். அவளது பராமரிப்பின் கீழ் உள்ளவை பற்றி அவளிடம் (மறுமை நாளில்) விசாரணை செய்யப்படும்"

4) குடும்பங்கள். கோத்திரங்களிடையே உறவை வலுப்படுத்துதல்.

- எங்கேயோ வாழ்கிற இரு குடும்பங்கள்., சொந்தபந்தம் எதுவுமில்லாமல் இருக்கிறார்கள். அவர்களுக்கிடையே திருமண பந்தம் என்பது உறவையும் நெருக்கத்தையும் ஏற்படுத்திவிடுகிறது.

இதனால் திருமணத்தை வம்ச உறவுக்குச் சமமானதாக அல்லாஹ் ஆக்கியுள்ளான் - முன்னர் நாம் குறிப்பிட்டது போன்று!

ஏனெனில் திருமணம்தான் மனித இனம் நிலைத்திருப்பதன் அடிப்படையான சந்ததி உரு வாக்கத்திற்கு மூலகாரணமாக அமைந்துள்ளது.

5 - சிறப்பான முறையில் மனித இனம் நீடித்து வாழ்தல். குர்ஆனில் அல்லாஹ் கூறுகிறான்:

قال الله تعالى : يَا اَيُّهَا النَّاسُ اتَّقُوْا رَبَّكُمُ الَّذِى خَلَقَكُمْ مِنْ نَفْسٍ وَاحِدَةٍ وَ خَلَقَ مِنْهَا زَوْجَهَا وَ بَثَّ مِنْهُمَا رِجَالاً كَثِيْـــرًا وَ نِسَاءً (سورة النساء الآية: ١)

" ஓ மனிதர்களே! உங்களை ஓர் ஆன்மாவில் இருந்து படைத்த உங்கள் இறைவனுக்கு அஞ்சுங்கள்., அவனே அதே ஆன்மாவில் இருந்து அதன் துணையைப் படைத்தான். மேலும் அவர்கள் இருவரின் மூலம் (உலகில்) அதிகமான ஆண்களையும் பெண்களையும் பரவச் செய் தான்" (4 : 1)

மேலும் திருமணம் இல்லையெனில் இரண்டு தீமைகள் ஏற்படுவதைத் தவிர்க்க முடியாது:

1) மனித இனத்தின் அழிவு. - அல்லது

2) மனிதன் விபச்சாரத்தின் மூலம் பிறந்து வாழ வேண்டியதாகும். யார் அவனது மூதாதையர் என்பது தெரியாதுபோகும். நல்லொழுக்கத்தை அவன் பேணிடவும் மாட்டான்.

இந்த இடத்தில் 'குடும்பக் கட்டுப்பாடு' செய்வதன் சட்ட நிலை பற்றி சில விஷயங்களைச் சொல்வது பொருத்தமாக இருக்குமெனக் கருதுகிறேன். ஓரிரு பிள்ளைகளுடன் குழந்தைப் பேற்றினை நிறுத்திக் கொள்வது இஸ்லாமிய ஷரீஅத்தின் விருப்பத்திற்கு மாற்றமானதாகும்.

ஏனெனில் பிள்ளைகளை அதிகம் பெற்றெடுக்கக்கூடிய பெண்ணைத் திருமணம் செய்யுமாறு நபி (ஸல்) அவர்கள் கட்டளையிட்டுள்ளார்கள். மட்டுமல்ல - ஏனைய சமுதாயத்தினருக்கு மத்தி யில் அல்லது நபிமார்களுக்கு மத்தியில் எனது 'உம்மத்தினரின்' எண்ணிக்கை குறித்து நான் பெருமை அடைபவனாக இருக்கிறேன் என அதற்கான காரணத்தையும் நபி (ஸல்) அவர்கள் விளக்கியுள்ளார்கள்.

ஃபிக்ஹு சட்ட வல்லுனர்கள் சொல்வர்: அதிகக் குழந்தைப் பேறுடையவள் என அறியப்பட்ட பெண்ணைத் திருமணம் செய்வது அவசியம். அவள், முன்பு திருமணம் செய்தவளாக இருந்து ஒன்றுக்திகமான பிள்ளைகளைப் பெற்றவளாக இருந்தால்- அவளைக் கொண்டே அதனை அறிய லாம். அப்படி திருமணம் செய்தவளாக இல்லை எனில் அவளுடைய நெருங்கிய உறவுப் பெண் களின் மூலமாக - தாய், சகோதரி மூலமாக அதை அறியலாம்!

குடும்பக் கட்டுப்பாடு செய்யத் தூண்டும் காரணி என்ன?

உணவு நெருக்கடி ஏற்பட்டுவிடுமோ எனும் அச்சம் காரணமா? அல்லது குழந்தைகளை நல்ல விதமாக வளர்ப்பது சிரமமாகி விடும் எனும் அச்சம் காரணமா?

முந்தையது காரணமெனில் அது அல்லாஹ்வைப் பற்றி தவறான கருத்து கொள்வதாகி விடும். ஏனெனில் அல்லாஹ் ஓர்உயிரைப் படைக்கிறான் எனில் அதற்கு உணவளிக்கும் பொறுப்பையும் அவனே ஏற்றுள்ளான்.குர்ஆனில் அல்லாஹ் கூறுகிறான்:

قال الله تعالى: وَمَا مِنْ دَآبَّةٍ فِى الْاَرْضِ اِلاَّ عَلَى اللهِ رِزْقُهَا (سورة هود الآية : ٦)

"உணவளிப்பதற்கு அல்லாஹ் பொறுப்பேற்காத எந்த உயிரினமும் பூமியில் இல்லை"(11:6)

இன்னோர் இடத்தில்,

قال الله تعالى : وَكَاَيِّنْ مِّنْ دَابَّةٍ لاَ تَحْمِلُ رِزْقَهَا ، اللهُ يَرْزُقُهَا وَ اِيَاَّكُمْ وَهُوَ السَّمِيْعُ الْعَلِيْم (سورة العنكبوت الآية: ٦٠)

"எத்தனையோ பிராணிகள் உள்ளன., அவை தாமே தமது உணவைச் சுமந்துகொண்டு திரிவ தில்லை. அல்லாஹ் அவற்றிற்கு உணவளிக்கிறான். உங்களுக்கும் அவனே உணவு அளிக்கி றான்.அவன் யாவற்றையும் செவியுறுபவனாகவும் நன்கு அறிபவனாகவும் இருக்கிறான்" (29 :60)

மேலும் வறுமைக்கு அஞ்சி தம்முடைய பிள்ளைகளைக் கொல்லக் கூடியவர்கள் குறித்து இவ்வாறு கூறுகிறான்:

قال الله: نَحْنُ نَرْزُقُكُمْ وَ اِيَّاكُمْ (سورة الاسراء الآية: ٣١)

“நாம்தாம் அவர்களுக்கும் (அதாவது உங்கள் பிள்ளைகளுக்கும்) உணவளிக்கிறோம். உங்க ளுக்கும் உணவளிக்கிறோம்” (17 : 31)

குடும்பக் கட்டுப்பாடு செய்வதற்கு குழந்தைகளைச் சிறந்த முறையில் பராமரிப்பதன் சிரமம் குறித்த அச்சம் காரணமாக இருந்தால் அதுவும் தவறாகும். ஓரிரு குழந்தைகளை மட்டும் வைத் திருக்கும் பெற்றோர்கள் தம் பிள்ளைகளை வளர்த்துப் பராமரிக்கும் விஷயத்தில் எவ்வளவு பெரிய சிரமத்திற்குள்ளாக நேரிடுகிறது! ஆனால் அதிகமான பிள்ளைகளை வைத்திருக்கும் தாய் தந்தையர் எத்துணை இலகுவாக பிள்ளைகளை வளர்த்து பராமரித்து விடுகிறார்கள்!

எனவே குழந்தைகளைப் பராமரித்து வளர்ப்பதன் இலகுவும் சிரமமும் அல்லாஹ் தருகிற சௌகரியத்தைப் பொறுத்த விஷயமாகும்.

ஓர் அடியான் தன் அதிபதியை அஞ்சி வாழ்ந்தால் - ஷரீஅத்தின் வழிகளில் நடைபோட்டால் அவனுடைய செயல்களை அல்லாஹ் இலகு வாக்கித் தருகிறான். அல்லாஹ் கூறுகிறான்:

قال الله تعالى: وَمَنْ يَتَّقِ اللهَ يَجْعَلْ لَهُ مِنْ اَمْرِهِ يُسْرًا (سورة الطلاق الآية: ٤)

“ யார் அல்லாஹ்வுக்கு அஞ்சுகிறாரோ அவரது விவகாரத்தில் அல்லாஹ் இலகுவவை ஏற்படுத் துகிறான்” (65 : 4)

குடும்பக் கட்டுப்பாடு செய்வது இஸ்லாமிய ஷரீஅத்திற்கு முரணான செயல் என்பது தெளி வாகி விட்டது எனும்போது இப்படி ஒரு கேள்வி எழலாம்:

தாயின் நலனை முன்னிட்டு அதற்கேற்ற முறையில் குழந்தைப் பேற்றைக் கட்டுப்படுத்து வதற்கும் இந்தச் சட்டம்தானா?

இல்லை! தாயின் நலனை அனுசரித்து குழந்தைப் பேற்றைக் கட்டுப்படுத்துவது ஷரீஅத்தி ற்கு முரணானது அல்ல. குழந்தைப் பேற்றைக் கட்டுப்படுத்துவது என்றால் அடிக்கடி கருத் தரிப்பதைத் தடுக்கும் வழியை - கணவன், மனைவி இருவருமோ அல்லது ஒருவரோ மேற் கொள்வதாகும். இதில் குற்றமில்லை. கணவன் - மனைவி இருவரும் அதைப் பொருந்திக் கொள்ளும் பட்சத்தில் அது கூடும்!

எடுத்துக்காட்டாக, மனைவி பலவீனமாக இருக்கிறாள், கர்ப்பம் தரிப்பது அவளை மேலும் பலவீனம் அடையச் செய்துவிடும்., அல்லது ஏதேனும் நோய் ஏற்பட்டுவிடுமோ எனும் அச்சம் உள்ளது., அவளது நிலையோ உடலுறவு கொண்டால் சீக்கிரம் கர்ப்பம் தரித்து விடுகிறாள்! இந்த நிலையில் குறிப்பிட்ட சில காலத்திற்கு கருத்தடை மாத்திரைகளை அவள் பயன்படுத் தாலம். அதில் குற்றமில்லை.

நபிகள் நாயகம் (ஸல்)அவர்களின் காலத்தில் நபித்தோழர்கள் ‘அஸ்ல்’ செய்பவர்களாக இருந் தார்கள். அப்படிச் செய்யக்கூடாதென அவர்கள் தடை செய்யப்படவில்லை. ‘அஸ்ல்’ செய்வ தென்பது உடலுறவின்பொழுது கர்ப்பம் தரிப்பதைத் தவிர்க்கச் செய்யும் இயல்பான ஒருவழிமுறை ஆகும்!

## 8 - திருமணத்தினால் ஏற்படும் சட்ட நிலைகள்

திருமணத்தினால் பற்பல சட்ட நிலைகள், நலன்கள் ஏற்படுகின்றன. அவற்றில் சிலவற்றை நாம் குறிப்பிடுகிறோம்.

1 ‘மஹ்ர்’ வழங்குது அவசியம்.

‘மஹ்ர்’ திருமணத்தின்போது பெண்ணுக்குச் சேர வேண்டிய உரிமையாகும். திருமணத்தில் அதை நிபந்தனையாகக் குறிப்பிட்டாலும் குறிப்பிடாவிட்டாலும் சரியே!

மஹ்ர் என்பது திருமண ஒப்பந்தத்தை முன்னிட்டு மனைவிக்கு (மணமகன் சார்பாக) வழங் கப்படுகிற பணமோ பொருளோ ஆகும். (திருமணத்தில்) மஹ்ரின் அளவு வரையறை செய்து கூறப்பட்டால் அதுவே மஹ்ர். அது குறைவாக இருந்தாலும் கூடுதலாக இருந்தாலும் சரியே! மஹ்ரின் அளவு இவ்வளவுதான் என்று குறிப்பிடப்படாமல் இருந்தால் (மஹ்ர் எதுவும் கொடுக் காமல் திருமணம் நடைபெறுவதுபோன்று - அல்லது மஹ்ர் இவ்வளவு என்று குறிப்பிடாமல் திருமணம் நடைபெறுவது போன்று) அப்போது ஊர் வழக்கில் உள்ள மஹ்ரை (மஹ்ருல் மிஸ்ல்) வழங்குவது கடமையாகும்.

இதன் மூலம் தெரியவருகிறது: திருமணத்தின் போது மணமகன் சார்பாக மணமகளுக்கு மஹ்ர் அவசியம் வழங்கியாக வேண்டும். பின்வரும் குர்ஆன் வசனத்தில் இறைவன் இடும் கட்டளை அதுவே:

قال الله تعالى: وَآتُوْا النِّسَاءَ صَدُقَاتِهِنَّ نِحْلَةً ( النساء الآية: ٤)

“ மேலும் பெண்களுக்கு அவர்களுக்குரிய மஹ்ரை (கடமையெனக்கருதி) மனமுவந்து வழங்கி விடுங்கள்” (4 : 4)

ஆயினும் இந்தியா, பாகிஸ்தான், பங்களா தேசம் போன்ற நாடுகளில் முஸ்லிம்களிடையே திருமணத்தின்போது சீதனம் எனும் பெயரில் பணத்தையும் பொருள்களையும் பெண்ணிடம் இருந்து ஆண்மகன் வாங்கிக்கொள்ளும் பழக்கம் உள்ளது எனும் விவரம் என் கவனத்திற்குக் கொண்டு வரப்பட்டது. இது இஸ்லாமிய ஷரீ அத்தின் நடைமுறைகளின் பாற்பட்டதல்ல. அது மட்டுமல்ல, ஷரீஅத்தின் வழிகாட்டலுக்கு நேர்முரணான செயலுமாகும் இது!

மஹ்ர் பணமாகவோ பொருளாகவோ இருக்கலாம் என்பது போன்று பயன்பாடாகவும் இருக்க லாம். அண்ணல் நபி(ஸல்) அவர்கள் ஒரு மனிதருக்கு ஒரு பெண்ணைத் திருமணம் முடித்துக் கொடுத்தார்கள். குர்ஆனில் சில அத்தியாயங்களை அவளுக்கு அவர் கற்றுக் கொடுப்பதையே மஹ்ராக நிர்ணயம் செய்தார்கள்.

ஷரீஅத் சட்டத்தைப் பொறுத்தவரையில் மஹ்ர் குறைவாக இருக்க வேண்டும். குறைவாக எளிதாக இருக்கும் மஹ்ர்தான் மிகச் சிறந்ததாகும். அதில் - அண்ணல் நபி (ஸல்)அவர்களைப் பின்பற்றுதலும் இருக்கிறது. அருள் வளமும் இருக்கிறது. திண்ணமாக செலவு குறைவான திருமணம்தான் அதிக அருட்பேறு உள்ள திருமணமாகும்.

இமாம் முஸ்லிம் (ரஹ்) அவர்கள் தமது ஸஹீஹில் அறிவித்துள்ளார்கள்: “ஒரு மனிதர் நபி (ஸல்) அவர்களிடம் வந்து நான் ஒரு பெண்ணைத் திருமணம் செய்துள்ளேன்’ என்று தெரிவித் தார்.அவளுக்கு நீ கொடுத்த மஹ்ர் எவ்வளவு? என்று நபியவர்கள் கேட்டார்கள். அதற்கு அவர், நான்கு ஊக்கியா (அதாவது, 160 வெள்ளி நாணயம்) என்று சொன்னார். இதனைக் கேட்டதும் நபியவர்கள் கூறினார்கள்: நான்கு ஊக்கியாவா? வெள்ளியை நீங்கள் இந்த மலையில் இருந்து வெட்டி எடுக்கிறீர்கள்போல் தெரிகிறது! - தற்போது உமக்குக் கொடுப்பதற்கு உம்மிடம் எதுவும் இல்லை. ஆனால் உம்மை ஒரு படையுடன் அனுப்பலாம் என உள்ளேன். அதில் ஏதாவது உமக்குக் கிடைக்கலாம்” - நபி (ஸல்) அவர்கள் இவ்வாறு அவரிடம் கூறியது அவர் ஓர் ஏழை என்பதனாலாகும்.

உமர் (ரலி)அவர்கள் சொன்னார்கள்: “பெண்களுக்கான மஹ்ர் தொகையை அளவுக்கு மீறி அதிகப்படுத்தாதீர்கள். அப்படிச் செய்வது இவ்வுலகில் புண்ணியச் செயலாகவும் மறுமையின் பயபக்தி நிலையாகவும் இருந்திருந்தால் நபி (ஸல்) அவர்கள் உங்களையெல்லாம் விட அதிக மான மஹ்ர் கொடுத்திருப்பார்கள். நபியவர்கள் தம் மனைவியரில் எவருக்கும் 12 ஊக்கியாவுக்கு அதிகமாக மஹ்ர் கொடுக்கவில்லை. அவர்களின் பெண்மக்களில் எவருக்கும் அதற்கு அதிகமான மஹ்ர் வாங்கப்படவில்லை. ஒருஊக்கியா என்பது 40 வெள்ளி நாணயமாகும்.

இன்றைய காலத்தில் மஹ்ர் தொகையின் அதிகரிப்பு சமுதாயத்தில் பல தீய விளைவுகளை ஏற்படுத்திவிட்டது.எத்தனையோ ஆண்களையும் பெண்களையும் திருமணத்தை விட்டும் தடுத்து வைத்துவிட்டது. ஓர் ஆண்மகன் மஹ்ர் தொகையைச் சம்பாதிப்பதற்கு பல ஆண்டுகளைத் தியா கம் செய்ய வேண்டியதாகிறது. இதனால் பல்வேறு தீமைகள் உண்டாகின்றன. அத்தகைய சில தீமைகளை இங்கு சுட்டிக் காட்டுகிறோம்.

அ. ஆண்கள் - பெண்களின் வாழ்வு திருமணமின்றி வீணாகுவது.

ஆ. மஹ்ர் கூடுதலாக உள்ளதா? குறைவாக உள்ளதா? என்றுதான் பெண் வீட்டார் பார்க்கி றார்கள். பெரும்பாலோரின் கண்ணோட்டம், மஹ்ர் என்பது ஆண்மகனிடம் இருந்து தமது மகளுக் குச் சம்பாதித்துக் கொடுக்கும் கருவி என்பதே! மஹ்ர் அதிகம் எனில் மணமுடித்துக் கொடுக்கி றார்கள்., விளைவுகளைக் குறித்து சிந்திப்பதே இல்லை. மஹ்ர் குறைவாக இருந்தால் மணம் முடித்துக் கொடுக்க மறுத்து விடுகிறார்கள்! தீனிலும் நல்லொழுக்கத்திலும் மணமகன் எவ்வளவு சிறந்தவனாக இருந்தாலும் சரியே!

இ. இப்படியாக மஹ்ர் திகைப்பூட்டும் அளவு இருக்கும்போது - கணவன், மனைவிக்கிடையே உறவு மோசமடைந்து விடுமானால், நல்ல முறையில் அவளை விட்டும் பிரிந்து விடுவதற்கு கணவனின் மனம் இடம் தராது! மஹ்ராக கொடுத்த பணத்தில் கொஞ்சமாவது அவள் திருப்பித் தர வேண்டும் என்பதற்காக அவளுக்குத் தீங்கிழைப்பான்.தொல்லை கொடுப்பான். மஹ்ர் குறைவாக இருந்தால் அவளை விட்டுப் பிரிவது அவனுக்கு இலகுவாகியிருக்கும்!

மக்கள் மஹ்ர் விஷயத்தில் நடுநிலையான போக்கை மேற்கொண்டு, அதற்காக ஒருவருக் கொருவர் விட்டுக்கொடுத்து உதவினால், சமுதாயப் பிரமுகர்களும் இதனை நடைமுறைப்படுத் தினால் சமுதாயத்திற்குப் பல நன்மைகளும் அதிக அளவு அமைதியும் கிட்டும்! அதிகமான ஆண்களும் பெண்களும் திருமணம் முடித்து இல்லற வாழ்வை மேற்கொள்ளலாம்!

ஆனால் மனம் வருந்தத்தக்க நிலை என்ன வெனில் மஹ்ர் தொகையை அதிகப்படுத்துவதில் தான் மக்கள் போட்டிபோட்டு ஒருவரை ஒருவர் முந்திக்கொண்டிருக்கிறார்கள். முன்னெப்போதும் அறியப்பட்டிருக்காத பல்வேறு பொருட்களை ஒவ்வொரு ஆண்டும் புதிது புதிதாக மஹ்ரில் சேர்த்துக்கொண்டே இருக்கிறார்கள். இது எங்கு போய் முடியும் என்பதை நாம் அறியோம்!

முன்பு ஒரு காலத்தில் மக்களில் சிலரிடம் - குறிப்பாக நாட்டுப்புற மக்களிடம் ஒருவித நடை முறை இருந்தது. அதில் சில வசதிகள் உள்ளன. அது என்னவெனில், மஹ்ரில் ஒரு பகுதியைச் சில காலத்திற்குப் பிறகு கொடுப்பதுதான்! எடுத்துக்காட்டாக, மஹ்ரின் அளவை நிர்ணயித்து அதில் பாதியைத் திருமணம் நடக்கும்போது கொடுப்பது., மீதியை ஓராண்டு ஈராண்டுக்குப் பிறகோ ஆறு மாதத்திற்குப் பிறகோ கொடுப்பது! இந்த நடைமுறை மணமக னுக்கு ஓரளவு சிரமத்தைக் குறைக்கிறது.

## 2 - செலவு

தன் மனைவியின் செலவுக்கு மகிழ்ச்சியாகப் பணம் கொடுப்பது கணவன் மீது கடமையாகும். அவளது உணவு, உடை, இடம் ஆகியவற்றிற்கு அவன் ஏற்பாடு செய்ய வேண்டும். இவை போன்ற அத்தியாவசியத் தேவைகளில் அவன் கஞ்சத்தனம் செய்தால் அவன் பாவியாவனான். அப்போது அவன் தன் தேவைக்குப் போதுமான அளவு அவனது பணத்திலிருந்து எடுத்துக்கொள் ளலாம். அல்லது அவனது பெயரில் கடன் வாங்கிக் கொள்ளலாம். அந்தக் கடனை அவன் திருப்பிக் கொடுப்பது அவசியமாகும்.

திருமணச் செலவுகளில் வலீமாவும் ஒன்று. இது திருமண நாட்களில் கணவன் ஏற்பாடு செய்து, மக்களை அழைத்து வழங்கும் விருந்தாகும். இது, கண்டிப்பாகக் கட்டளையிடப்பட் டுள்ள ஸுன்னத் எனும் நபிவழி. நபி (ஸல்) அவர்களும் வலீமா விருந்து அளித்துள்ளார்கள். அதனை வழங்குமாறு பிறரை ஏவியும் உள்ளார்கள்.

ஆனால் வலீமா விருந்தில் விலக்கப்பட்ட - வீண் விரயத்தைத் தவிர்ப்பது கடமை. இந்த விருந்து கணவனின் பொருளாதார நிலைமைக்கு ஏற்பவே அமைதல் வேண்டும்.

மக்களில் சிலர் இது விஷயத்தில் அளவு, தரம் இரண்டைப் பொறுத்தும் வீண் விரயம் செய்கிறார்கள். இது ஆகுமானதல்ல! இதனால் ஏராளமான பணம் எவ்விதப் பயனுமின்றி வீணா கிறது!

3 - கணவன், மனைவி இருவரின் குடும்பங்களுக்கிடையிலான உறவு

-கணவன், மனைவி இருவரிடையே அன்பையும் கருணையையும் அல்லாஹ் ஏற்படுத்தியுள் ளான். பழக்க வழக்க நிலையில் இத்தகைய அன்புறவு சில உரிமைகளையும் கடமைகளையும் வலியுறுத்துகிறது. இந்தஉறவு நீடித்து நிலைத்து நிற்கும் பொருட்டே அந்தக் கடமைகளும் உரிமைகளும் அவசியமாகின்றன!

4- திருமணம் செய்வது கூடாது எனும் நிலை

மனைவியின் தாய், அவளுடைய பாட்டிமார்கள், கொள்ளுப்பாட்டி ஆகியோரைத் திருமணம் செய்வது கூடாது எனும் நிலை கணவனுக்கு ஏற்படுகிறது.

இதேபோன்று மனைவியின் புதல்விகள், அவளுடைய மகன்களின் புதல்விகள், அப்புதல்வி களின் புதல்விகள் ஆகியோரைத் திருமணம் செய்வதும் அவனுக்குத் தடைசெய்யப்படுகிறது. இந்த இரண்டாவது நிலை, தன் மனைவியுடன் அவன் உடலுறவு கொண்டிருந்தால் மட்டுமே ஆகும்.

இவ்வாறாக கணவனின் தந்தை, பாட்டனார், பூட்டனார் மற்றும் கணவனின் புதல்வர்கள், புதல்வர்களின் புதல்வர்கள் ஆகியோரைத் திருமணம் செய்வது கூடாது எனும் நிலை மனைவிக்கு ஏற்படுகிறது!

5 - வாரிசுதாரர் ஆகும் நிலை

ஒரு மனிதன் ஒரு பெண்ணை முறையாகத் திருமணம் செய்து கொண்டால் ஒருவர் மற் றொருவரின் சொத்தைப் பரஸ்பரம் வாரிசாகப் பெறும் நிலை அவ்விருவரிடையே செல்லுடியா கிறது. குர்ஆனில் அல்லாஹ் கூறுகிறான்:

قال الله تعالى: وَلَكُمْ نِصْفُ مَا تَرَكَ اَزْوَاجُكُمْ ... الى قوله : تُوْصُوْنَ بِهَا اَوْ دِيْنٍ (سورة النساء الآية: ١٢)

" மேலும் (மரணமடைந்த) உங்களுடைய மனைவியர் விட்டுச் சென்ற சொத்தில், அவர் களுக்குக் குழந்தைகள் இல்லையெனில் பாதிப்பங்கு உங்களுக்குண்டு. அவர்களுக்குக் குழந் தைகள் இருந்தால், அவர்கள் விட்டுச் சென்ற சொத்தில் நான்கில் ஒரு பாகம் உங்களுக்கு உண்டு. அவர்கள் செய்த மரணசாஸனம் நிறை வேற்றப்பட்ட பிறகும் அவர்கள் விட்டுச் சென்ற கடன் அடைக்கப்பட்ட பிறகும்தான் (இந்தப் பங்கீடு) (4 : 12)

அவன் அவளுடன் உடலுறவு கொண்டாலும் கொள்ளாவிட்டாலும் அவன் அவனுடன் தனியே இருந்தாலும் இல்லாவிட்டாலும் சரியே! இந்த வாரிசு நிலை செல்லுபடிகிறது!

# 9 - மணவிலக்கின் சட்டமும் அதன் ஒழுங்கு முறைகளும்

தலாக் - மணவிலக்கு என்பது மனைவியை விட்டும் முற்றாக விலகி விடுவதாகும்., சொல் அல்லது எழுத்து அல்லது சைக்கினை ஆகிய வற்றின் மூலம்!

மணவிலக்கைப் பொறுத்து சட்டத்தின் அசல் நிலை யாதெனில், அது வெறுக்கத்தக்க செயல் என்பதே. ஏனெனில் அதனால் திருமணத்தின் பயன்களும் நலன்களும் பாழாகிப்போகின்றன. குடும்பத்தின் கட்டுக்கோப்பு குலைந்து விடுகிறது!

நபிமொழியில் கூறப்பட்டுள்ளது: "ஹலாலான (ஆகுமான) செயல்களிலேயே அல்லாஹ்வுக்கு மிகவும் கோபமானது தலாக் (எனும் மணவிலக்கு)தான்" (நூல்: அபூ தாவூத்)

ஆனாலும் சில நேரங்களில் தலாக் தவிர்க்க முடியாத ஒன்றாகி விடுகிறது. ஒன்று: ஒரு பெண் தன் கணவனுடன் தொடர்ந்து வாழ்வதில் துன்பத்திற்கு ஆளாகிறாள்.அல்லது ஆண், தன் மனைவியிடம் துன்பம் அடைகிறான். இவை அல்லாத இன்னும் பல காரணங்களாலும் தலாக் நிகழ்கிறது!

ஆதலால் அல்லாஹ் தன் அடியார்களுக்கு மணவிலக்கு செய்ய அனுமதித்திருப்பது அவன் பொழிந்த அருட்கொடையே ஆகும். துன்பத்தை யும் நெருக்கடியையும் சகித்துக் கொண்டிருக்கு மாறு தன்னுடைய அடியார்களை அல்லாஹ் நிர்பந்திக்கவில்லை!

ஒரு மனிதன் தன் மனைவியை வெறுப்பானாகில் - பொறுமை எல்லை மீறிப்போகிறதெனில் அவளை அவன் மணவிலக்கு செய்வதில் குற்றமில்லை. ஆனால் பின்வரும் ஒழுங்கு முறை களை அவன் பேணிட வேண்டும்.

அ. மாதவிடாய்க் காலத்தில் மணவிலக்கு செய்யக்கூடாது.

மாதவிடாய்க் காலத்தில் அவளை அவன் மணவிலக்கு செய்வானாகில் அல்லாஹ்வின் கட்ட ளைக்கும் அவனுடைய தூதரின் கட்டளைக்கும் மாறுபட்டு நடப்பவனாவான். ஹராம் எனும் விலக்கப்பட்ட காரியத்தைச் செய்தவன் ஆவான்!எனவே அவளைத் திரும்ப அழைத்துக்கொள்வது அவனது கடமையாகும். மாதவிடாய்க் காலம் முடியும் வரையில் அவளைத் தன் மனைவியாய் வைத்துக் கொள்ள வேண்டும். அதன் பிறகு அவளை மணவிலக்கு செய்ய விரும்பினால் செய்து கொள்ளலாம்.இதிலும்கூட சிறந்த முறை யாதெனில் இரண்டாவது தடவை மாதவிடாய் ஏற்படும் வரை அவளை விட்டு விடவேண்டும். அதிலிருந்து அவள் தூய்மையானதும் விரும்பினால் தன் மனைவியாக வைத்துக் கொள்ளலாம். விரும்பினால் மண விலக்கு செய்யட்டும்!

**ஆ. தூய்மைக் காலத்தில் உடலுறவுக்குப் பின் விவாக ரத்து செய்யக்கூடாது., கர்ப்பம் தரித்திருப்பதாக தெரிந்தாலே தவிர!**

ஒருவன் தன் மனைவியை - மாதவிடாய் நின்ற பிறகு அவளுடன் உடலுறவு வைத்துக் கொண்ட நிலையில்- மணவிலக்கு செய்ய விரும்பினால், அவளுக்கு மீண்டும் மாதவிடாய் கண்டு அதன் பிறகு தூய்மையாகிற வரையில் அவளை மணவிலக்கு செய்யக்கூடாது! காலம் எவ்வளவு நீண்டாலும் சரியே! அதன் பிறகு மணவிலக்கு செய்ய விரும்பினால் அவளுடன் உடலுறவு கொள்வதற்கு முன்பே செய்துவிட வேண்டும். ஆனால் அவள்கர்ப்பம் தரித்திருப் பதாகத் தெரியவந்தால் அல்லது முன்னரே அவள் கர்ப்பவதியாக இருந்தால் (உடலுறவு கொள் வதுடன்) அவளை மணவிலக்கு செய்வதில் குற்றமில்லை! குர்ஆனில் அல்லாஹ் கூறுகிறான்:

**قال الله تعالى: يَا اَيُّهَا النَّبِيُّ اِذَا طَلَّقْتُمُ النِّسَاءَ فَطَلِّقُوْ هُنَّ لِعِدَّتِهِنَّ** (سورة الطلاق الآية : ١)

"நபியே! நீங்கள் பெண்களை மணவிலக்கு செய்ய விரும்புவீர்களாயின் அவர்களின் இத்தா காலத்தை நிர்ணயிக்க வசதியாக மணவிலக்கு செய்யுங்கள்" (65 : 1)

இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் சொல்கிறார்கள்: "மனைவியை அவளது மாதவிடாய்க் காலத்தில் மணவிலக்கு செய்ய வேண்டாம். அதிலிருந்து அவள் தூய்மையான பிறகும்கூட - அவளுடன் உடலுறவு வைத்துக்கொண்டு அதன் பிறகு மணவிலக்க செய்ய வேண்டாம். மாறாக, மாதவிடாய் காணும் வரை அவளை விட்டுவைக்கவும். அதிலிருந்து அவள் தூய்மையான பிறகு ஒரே ஒருதடவை அவளை தலாக் சொல்லவும்"

**இ. ஒரே நேரத்தில் ஒரு தடவைக்கு மேல் தலாக் சொல்லக் கூடாது.**

உன்னை இரண்டு தலாக் சொல்கிறேன் என்றோ, உன்னை முத்தலாக் சொல்கிறேன் என்றோ, உன்னை தலாக் சொல்கிறேன், உன்னை தலாக் சொல்கிறேன், உன்னை தலாக் சொல்கிறேன் என்றோ (மூன்று தடவை) கூறி மணவிலக்கு செய்வது சரியல்ல! ஒரே நேரத்தில் முத்தலாக் சொல்வது ஹராம் - விலக்கப்பட்ட செயலாகும். ஏனெனில் நபி (ஸல்) அவர்களிடம் இருந்து அறிவிக்கப்பட்டுள்ளது:

**عن النبي اَنَّهُ قَالَ فِى رَجُلٍ طَلَّقَ امْرَأَتَهُ ثَلَاثَ تَطْلِيْقَاتٍ جَمِيْعًا : أَيَلْعَبُ بِكِتَابِ اللهِ ، وَ اَنَا بَيْنَ أَظْهُرِكُمْ ؟ حَتَّى قَامَ رَجُلٌ فَقَالَ : يَا رَسُوْلَ اللهِ أَلاَ أَقْتُلُهُ؟**

" தன் மனைவியை ஒரே நேரத்தில் முத்தலாக் சொன்ன மனிதனைக் குறித்து நபியவர்கள் கூறினார்கள் : நான் உங்களிடையே உயிருடன் இருக்கும்போதே இன்ன மனிதர் அல்லாஹ்வின் வேதத்துடன் விளையாடுகிறாரா? - உடனே ஒரு மனிதர் எழுந்து, அல்லாஹ்வின் தூதரே! நான் அந்த மனிதரைக் கொன்று விடவா? என்று கேட்டார்"

பெரும்பாலான மக்கள் மணவிலக்கின் சட்டங்களை அறியாதிருக்கிறார்கள். எப்பொழுது தலாக் சொல்ல வேண்டும் என்று தோன்றுகிறதோ அப்பொழுதே உடனுக்குடன் தலாக் சொல்லி விடுகி றார்கள். நேரத்தையோ எண்ணிக்கையையோ பொருட்படுத்துவதில்லை! முஸ்லிம்களின் கடமை, அல்லாஹ் வகுத்துள்ள வரம்புகளைப் பேணி நடந்திட வேண்டும். அவற்றை மீறி நடக்கலாகாது! அல்லாஹ் திருக்குர்ஆனில் கூறுகிறான்:

قال الله تعالى: وَمَنْ يَتَعَدَّ حُدُوْدَ اللهِ فَقَدْ ظَلَمَ نَفْسَهُ (سورة الطلاق الآية: ١)

“ஒருவன் அல்லாஹ்வின் வரம்புகளை மீறுவானாகில் தனக்குத்தானே அநீதி இழைத்துக் கொண்டவன் ஆவான்” (65 : 1) மற்றோர் இடத்தில்,

قال الله تعالى: وَمَنْ يَتَعَدَّ حُدُوْدَ اللهِ فَأُولئِكَ هُمُ الظَّالِمُوْنَ (سورة البقرة الآية: ٢٢٩)

“யார் அல்லாஹ்வின் வரம்புகளை மீறுகிறார் களோ அவர்கள்தாம் அநியாகக்காரர்கள்”(2: 229)

## 10 - மணவிலக்கினால் ஏற்படும் சட்ட நிலைகள்

மணவிலக்கு என்றால் மனைவியை முற்றாகப் பிரிந்து விடுவது என்றானபோது - அதனால் பல்வேறு சட்டநிலைகள் ஏற்படுகின்றன. அவை வருமாறு:

அ. இத்தாக் கடமை., அவளுடன் உடலுறவு கொண்ட பிறகோ அல்லது தனி அறையில் அவளுடன் இருந்த பிறகோ மணவிலக்கு செய்தால் இத்தா (குறிப்பிட்ட காலம் காத்திருப்பது) கடமை ஆகும். குர்ஆனில் அல்லாஹ் கூறுகிறான் :

قال الله تعالى: يَا اَيُّهَا الَّذِيْنَ آمَنُوْا اِذَا نَكَحْتُمُ الْمُؤْمِنَاتِ ثُمَّ طَلَّقْتُمُوْهُنَّ مِنْ قَبْلِ اَنْ تَمَسُّوْهُنَّ فَمَا لَكُمْ عَلَيْهِنَّ مِنْ عِدَّةٍ تَعْتَدُّوْنَهَا (سورة الأحزاب الآية: ٤٩)

“ இறைநம்பிக்கை கொண்டவர்களே! இறை விசுவாசம் கொண்ட பெண்களை நீங்கள் திரு மணம் செய்து பிறகு அவர்களைத் தீண்டுவதற்கு முன்பே மணவிலக்கு செய்து விட்டீர்களா னால், நீங்கள் கணக்கிடக்கூடிய இத்தா காலம் எதுவும் உங்களுக்காக அவர்கள் மீது கடமை இல்லை” (33 : 49)

இத்தா என்பது,

* மூன்று மாதவிடாய்க் காலம் காத்திருப்பதாகும்., அவள் மாதவிடாய் ஏற்படும் பெண்ணாக இருந்தால்!
* மாதவிடாய் ஏற்படும் பெண்ணாக அவள் இல்லையெனில் மூன்று மாதங்கள் காத்திருப்ப தாகும்.
* அவள் கர்ப்பவதியாக இருந்தால் குழந்தை பெற்றெடுக்கும் வரை காத்திருப்பதாகும்.

ஆ. மனைவி, கணவன் மீது ஹராம் - விலக்கப்பட்டவளாகிவிடுவாள்., இதற்கு முன் னால் இரண்டு தடவை அவளை மணவிலக்கு செய்திருந்தால்!

-அதாவது, தன் மனைவியை அவன் மணவிலக்கு செய்து, பிறகு இத்தா காலத்தில் அவளை மனைவியாக திரும்ப அழைத்துக் கொள்கிறான்., அல்லது இத்தா காலம் கழிந்த பிறகு அவளை மணந்து கொள்கிறான்., பிறகு மீண்டும் இரண்டாம் தடவையும் அவளை மணவிலக்கு செய்து இத்தா காலத்தில் அவளை மனைவியாக திரும்ப அழைத்துக் கொள்கிறான்., அல்லது இத்தா காலம் கழிந்த பிறகு அவளை மீண்டும் மணந்து கொள்கிறான்., இதன் பிறகு மூன்றா வது தடவையும் அவளை மணவிலக்கு செய்தால் இப்போது அவள், அவனுக்கு ஹலால் - ஆகுமாக் கப்பட மாட்டாள்., அவனல்லாத வேறு ஒருவனை முறையாக அவள் திருமணம் செய்த பிறகு அவளுடன் அந்த இரண்டாம் கணவன் உடலுறவு கொண்டு பிறகு அவள் மீது வெறுப்படைந்து மணவிலக்கு செய்தால் - இவை யெல்லாம் இயல்பாக நடந்திருந்தால் மட்டும்தான் அவள், முதல் கணவனை திருமணம் செய்வதற்கு ஹலால் - ஆகுமாக்கப்படுவாள்!

குர்ஆனில் அல்லாஹ் கூறுகிறான்:

قال الله تعالى: الطَّلَاقُ مَرَّتَانِ فَإِمْسَاكٌ بِمَعْرُوْفٍ اَوْ تَسْرِيْحٌ بِاِحْسَانٍ (سورة البقرة الآية: ٢٢٩)

“ தலாக் (மணவிலக்கு) இரண்டு தடவைகள்தாம். பிறகு நேரிய விதத்தில் (அவளை) மனைவியாக வைத்துக்கொள்ள வேண்டும். அல்லது அழகிய முறையில் விடுவித்து விட வேண்டும்” (2 : 229) அதே வசனங்களில் தொடர்ந்து கூறுகிறான்:

قال ايضا: فَإِنْ طَلَّقَهَا فَلاَ تَحِلُّ لَهُ مِنْ بَعْدُ حَتَّى تَنْكِحَ زَوْجًا غَيْرَهُ فَإِنْ طَلَّقَهَا فَلاَ جُنَاحَ عَلَيْهِمَا اَنْ يَتَرَاجَعَا اِنْ ظَنَّا اَنْ يُقِيْمَا حُدُوْدَ اللهِ وَ تِلْكَ حُدُوْدُ اللهِ يُبَيِّنُهَا لِقَوْمٍ يَعْلَمُوْنَ ( البقرة الآية: ٢٣٠)

“ பின்னர் அவனை அவன் மணவிலக்கு செய்து விட்டால் (அதாவது, மூன்றாவது தடவை யாக மணவிலக்கு செய்து விட்டால்) இப்பொழுது அவள் அவனுக்கு ஹலால்- அனுமதிக்கப் பட்டவள் அல்ல., வேறொரு ஆடவனை அவள் திருமணம்செய்து அவன் அவளை மணவிலக்கு

செய்யாத வரையில்! இப்படி அவன் (இரண்டாம் கணவன்) அவளை மணவிலக்கு செய்து விட்டால் அப்பொழுது முதல் கணவனும் அவளும் - அல்லாஹ் விதித்த வரம்புகளில் நிலைத் திருப்போம் என்று எண்ணினால் அவ்விருவரும் (மீண்டும் மணவாழ்க்கைக்குத் திரும்புவதில்) அவர்கள் மீது குற்றமில்லை. (இறைவரம்புகளை மீறுவதால் ஏற்படும் விளைவுகளை) அறிந் திருக்கும் மக்களுக்கு அவன் இவற்றை விளக்குகிறான்" ( 2 : 230)

ஒருவன் தன் மனைவியை மூன்று தடவை மணவிலக்கு செய்து விடுவானாகில் - பிறகு அவள் வேறொருவனைத் திருமணம் செய்து கொள்கிற வரை அல்லாஹ் அவளை அவன் மீது ஹராம் - விலக்கப்பட்டவளாக்கியுள்ளான். ஏனெனில் இஸ்லாத்தின் ஆரம்ப காலத்தில் எத்தனை தடவை எனும் கணக்கின்றி மணவிலக்கு செய்து கொண்டும் பிறகு அவளை மனைவியாக திரும்ப அழைத்துக் கொண்டும் இருந்தார்கள்!

ஒரு தடவை ஒரு மனிதர் தன் மனைவியின் மீது கோபம்கொண்டார். அவளை நோக்கிக் கூறினார்: "நான் உனக்கு வாழ்வும் அளிக்க மாட்டேன்., பிரிந்து போகவும் விடமாட்டேன்"

அவள் 'அது எப்படி?' என்று கேட்டாள்.

அதற்கு அவர் சொன்னார்: "நான் உன்னை மணவிலக்கு செய்து விடுவேன். பிறகு இத்தா காலம் முடிந்து வரும் போது உன்னைத் திரும்ப அழைத்துக்கொள்வேன். மீண்டும் மணவிலக்கு செய்து விடுவேன். இத்தா காலம் முடிந்து வரும் போது உன்னை அழைத்துக்கொள்வேன். இப்ப டியே செய்து கொண்டிருப்பேன்"

இதனை அந்தப் பெண்மணி, நபி (ஸல்) அவர்களிடம் சொன்னாள். அப்பொழுது அல்லாஹ் இந்த வசனத்தை இறக்கினான்:

"தலாக் இரண்டு தடவைகள்தாம். (அதாவது திரும்ப அழைத்துக் கொள்ள அனுமதிக்கப்பட்ட தலாக் இரண்டு தடவைகள்தாம்) இந்த வசனத்தின் மூலம் பெண்களை, அவர்களின் தணவன் மார்களின் கொடுமைகளில் இருந்து பாதுகாப்பதற்காக தலாக் மூன்று தடவைகள்தாம் என்று வரையறை செய்தான்!

சகோதரர்களே! திருமணச் சட்டங்கள் தொடர்பாக சற்று அதிகமாக நான் பேசியிருக்கக் கூடும். இந்த விவரங்களை எல்லாம் போதிய அளவில் இடம்பெறச்செய்ய வேண்டும் என்பதே நோக்கம்! அதேநேரத்தில் படிப்பவர்களைச் சோர்வு அடையச்செய்யும் அளவு நீண்டுவிடவும் கூடாது என்பதில் கவனம் செலுத்தியுள்ளேன். தெளிவு குன்றச் செய்திடும் அளவு மிகச் சுருங்கி விடக் கூடாது என்பதிலும் கவனம் செயுத்தியுள்ளேன்.

இந்தச் சொற்பொழிவின் மூலம் அல்லாஹ் யாவருக்கும் நற்பயன் அளித்திட வேண்டுமென இறைஞ்சுகிறேன். இந்தப் பணியினை அவனுக்காகவே நிறைவேற்றப்பட்ட தூய பணியாய் அவ னது திருப்திக்கு எற்ற நல்ல பணியாய் அவன் ஆக்கிட வேண்டும் என்றும் பிரார்த்திக்கிறேன்.

மேலும் இந்தச்சமுதாயத்தில், அல்லாஹ்வின் கட்டளைகளை நன்கறிந்த சந்ததிகளை– அவன் விதித்த வரம்புகளைப் பேணி நடக்கக் கூடிய, அவனுடைய கட்டளைகளை நிறைவேற்றக்கூடிய சந்ததிகளை அல்லாஹ் தோற்றுவிக்க வேண்டும் என்றும் இறைஞ்சுகிறேன்.

எங்கள் இறைவனே! எங்களை நீ நேர்வழி யில் செலுத்திய பின்பு எங்கள் இதயங்களை வழிபிறழச் செய்துவிடாதே! மேலும் எங்களுக்கு உன் அருளிலிருந்து கொடை வழங்குவாயாக! திண்ணமாக நீயே தாராளமாக வழங்குவனாக இருக்கிறாய்.

எங்கள் இறைவனே! எங்களுக்கு இவ்வுலகிலும் நன்மை வழங்குவாயாக! மறுவுலகிலும் நன்மை வழங்குவாயாக! மேலும் நரகத்தின் வேதனையில் இருந்து எங்களைக் காத்தருள்வாயாக!

ஸல்லல்லாஹு அலா நபிய்யினா முஹம்மதின் வ அலா ஆலிஹி வ ஸஹ்பிஹி வ ஸல்லம்.